## பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர்

இதமான நறுமணம் கொண்டது
புத்துணர்ச்சி யளிக்கிறது
வியர்வையை உறிஞ்சுகிறது




ஸ்னானத்திற்குப் பின் அனுபவமாகும் புத்துணர்ச்சி நீடித்து நிற்க, நாள் முழுவதும் நறுமணத்துடன் திகழ, பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள். இதமான வாசனையுள்ள இந்த டால்கம் பவுடர் வியர்வையை விரைவில் உறிஞ்சி, எல்லாக் காலநிலைகளிலும், உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும் மனோ உல்லாசத்துடனும் வைக்கும். பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் குடும்பத்தினர் அனைவர்க்கும் ஏற்றது.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

**யாவரும் வாங்கக்கூடிய
உயர்தர டால்க்**

JWT-P-3216

# கல்கி



## பொருளடக்கம்




குரோதி பங்குனி 15 ❀ ❀ ❀ ❀ ❀ மார்ச் 28



● ● ● "கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


கேரளா
"எனக்கு விமோசனம் இல்லையா?"
காங்கிரஸ்


பார்த்தீர்களா? எனது தூய்மை வெளியாகி விட்டது
அக்கினிப் பிரவேசம்
நம்பிக்கை இல்லாத் தீர்மானம்
காங்கிரஸ் சர்க்கார்
தீத்தடுப்பு உடை


இப்பொழுது காற்று அடங்கிப் போயிருக்கும்
PK


தெருக்களில் ஏன் இந்த ஆபாசச் சுவரொட்டிகளுக் குச் சர்க்கார் இடமளித் திருக்கிறார்கள்?
பையன் கள் கூந் தல் வெட்டிப் பிரச் னையை மறந்து விடு வார்கள் என்ற நம் பிக்கையி னால் தான்!



மலர் 24 ○ இதழ் 35

# தடையைத் தகர்க்க வழி என்ன?

ராஜாஜி

காங்கிரஸ் ஆட்சியின் தவறுகளாலும், ஊழல் நிருவாகத்தாலும் பொறுமை இழந்துள்ள எல்லா அரசியல் கட்சிகளுக்கும் ஒரு முக்கியத்துவம் வாய்ந்த பெரிய விஷயத்தைப் பற்றிப் பேச விரும்புகிறேன்.

பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டாக்களை வழங்குவதன் மூலம் மக்களைத் தன் இஷ்டப்படி ஆட்டிவைக்கிற காங்கிரஸ் கட்சியிடமிருந்து இந்த மகத்தான அதிகாரம் பறிக்கப்பட்டாலொழிய நம் நாட்டில் ஜனநாயகம் பிழைக்க வழியில்லை. பெர்மிட், லைசென்ஸ் முதலிய பொருளாதாரக் கட்டுப்பாடுகளின் நிர்வாகத்தை ஸுப்ரீம் கோர்ட்டுக்கும் மற்ற நீதிமன்றங்களுக்கும் சமமான சுதந்திரம் பெற்ற ஓர் அமைப்பின் பொறுப்பில் விட்டாலொழிய அந்தச் சலுகைகளும் பட்சபாதங்களும் அளித்து ஆள்கிற கட்சியின் பலம் மறையாது. இதற்கென்று பார்லிமெண்ட் தனிச் சட்டம் செய்து, தரும ரீதியிலும், சட்ட ரீதியிலும் பூரண சுய நிருவாகப் பொறுப்புள்ள ஒரு பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டா போர்டு அமைக்க வேண்டும். இவ்விஷயத்தைப் பொதுஜனங்களும் பத்திரிகைகளும் வலியுறுத்தி, தங்கள் கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்ள உறுதியுடன் முயல வேண்டும். நாட்டின் உற்பத்தியிலும் வியாபாரத்திலும் ஈடுபட்டிருப்பவர்களையெல்லாம் சர்க்காரின் கைக்குள் அடக்கிக் கொள்வதற்குப் பெர்மிட்—லைசென்ஸ் முறையே முக்கியமான காரணம். இதன் மூலம் ஆள்கிற கட்சி பெற்றுள்ள அதிகார சக்தி ஜனநாயகப் பாதையில் ஒரு பெரும் முட்டுக்கட்டையாகி ஆட்சி ஒரு கட்சியிலிருந்து வேறொரு கட்சிக்குப் போவதற்கு வழியை அடைக்கிறது. சர்க்கார் சர்வாதீனத்தின் கொடுமைகளைக் குறைக்கும் ஓர் அதமபட்ச பரிகாரமாக, பெர்மிட் — லைசென்ஸ் விநியோகத்தை எவ்வித அரசியல் கட்சிச் சார்புமில்லாத ஒரு சுதந்திர போர்டிடம் ஒப்புவிக்கவேண்டும் என்று ஆசாரிய ரங்கா அவர்களும் நானும் நீண்டகாலமாக யோசனை கூறி வருகிறோம். சர்க்கார் ஊழல்களைப் பற்றி விசாரித்த சந்தானம் கமிட்டியும் இந்த யோசனையை ஆதரித்துச் சிபாரிசு செய்திருந்தது. ஆனால் நாளதுவரையில் இந்தத் திசையில் அரசாங்கம் ஓரடிகூட எடுத்துவைக்கவில்லை. பழைய கதையே தொடர்ந்து நடைபெறுகிறது.

தேசத்தின் பொருளாதார வாழ்வு முழுவதையும் அரசாங்கம் இயக்குவதற்கு அனுமதித்ததுதான் ஜனநாயகத்தின் அழிவுக்கு முதல் காரணமாகி விட்டது. கடந்த சில ஆண்டுகளாக நாட்டு விவகாரங்களைக் கூர்ந்து கவனித்ததில் நான் தெளிவாகக் காணும் உண்மை இது. என்றைக்கு நாம் மக்களின் பொருளாதார வாழ்வில் தலையிடக் காங்கிரஸ் ஆட்சிக்குப் பூரண சுதந்திரம் தந்தோமோ அன்றே பாறையில் மோதிய கப்பல்போல் ஜனநாயகம் சிதிலமாகி விட்டது. ஓர் அரசாங்கம் இத்தகைய சக்தி வகிப்பது நல்லதா கெட்டதா என்கிற பொருளாதார சாஸ்திரம் குறித்த பிரச்னை மட்டுமல்ல; நடைமுறையில் ஆளும் கட்சி இதனால் பெற்றுள்ள அதீதமான சக்தியால்தான் அது ஆட்சி பீடத்தில் தன்னை ஸ்திரமாக நிலைநாட்டிக் கொள்ள முடிகிறது. தேசிய உற்பத்தியில் ஈடுபட்டுள்ள



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா

— பாரதியார்

எல்லாத் தனி மனிதர்கள் மீதும் பெர்மிட் — லைசென்ஸ் முறையால் காங்கிரஸ் பெற்றுள்ள ஆதிக்கம்தான் அதனுடைய அபரிமிதமான பண பலத்துக்குக் காரணம். இந்தப் பண பலத்தினாலேயே மற்ற கட்சிகள் தேர்தல்களில் வெல்ல முடியாதபடி தன் கோட்டையை அது கெட்டிப்படுத்திக் கொண்டிருக்கிறது. இதோடு அப்பாவி மக்களின் அறியாமையும் சேர்ந்துவிட்டது. வரி போட்டும், மற்ற விதங்களில் பணம் திரட்டியும் நிருவாகம் நடத்துகிற எந்த சர்க்காரும் செய்ய வேண்டிய பொதுக் காரியங்களைத் தான் காங்கிரஸ் சர்க்கார் அமுல் செய்கிறது. எனினும் இவையெல்லாம் காங்கிரஸ் கட்சி காருண்யத்துடன் அளிக்கும் பிச்சை என்று மக்களை நம்பவைத்து, அதற்குப் பிரதியாக அவர்களுடைய வாக்குகளை வாங்குவது ஆளும் கட்சிக்குச் சாத்தியமாயுள்ளது. மக்களிடம் வாக்குகளை வாங்கவும், கட்சி அமைப்பைப் பெரும் செலவில் நாடெங்கும் விரிவு படுத்தவும் பெர்மிட் — லைசென்ஸ் முறை மிகவும் உதவி புரிகிறது. சர்க்கார் சிப்பந்திகளையும், சர்க்கார் தொடர்புள்ள ஸ்தாபன ஊழியர்களையும் காங்கிரஸ் கட்சிக்காகத் தேர்தல்களில் பயன்படுத்திக் கொள்வதால் ஜனநாயகப் பாதையில் உள்ள வழியடைப்பு பூரணமாகிவிடுகிறது. இந்தச் சூழ்நிலையில் எந்த எதிர்க் கட்சிதான் காங்கிரஸைப் பதவியிலிருந்து அகற்ற முடியும்? பதவியிலிருந்து அகற்ற முடியாவிட்டாலும் போகட்டும். பார்லிமென்டிலும், ராஜ்ய சட்ட சபைகளிலும் அரசாங்கம் கொண்டு வருகிற திட்டங்களின் தவறுகளை அழுத்தமாக எடுத்துக் காட்டிப் பொதுமக்கள் கருத்தை உருவாக்கக்கூடிய அளவுக்குப் பலம் பொருந்திய எதிர்க் கட்சிகள் உருவாவதற்கும் தடையாக இருப்பது பெர்மிட் லைசென்ஸ் தருகிற அதிகார பலம்தான். இது ஒரு பெரிய புஸ்தகமாக விரித்துரைக்க வேண்டிய உண்மையாகும்.

மக்களின் கோரிக்கைக்கு இணங்குவது போல் சிறிது காட்டிக் கொண்டு எதிர்ப்பைச் சமாளிப்பதும், பிறகு 'பழைய குருடி' என்று பாடம் தொடங்குவதும் அரசியல் தந்திரமாகும். பொருளாதாரக் கட்டுப்பாட்டை நிருவகிப்பதற்காகக் கமிட்டிகளும் போர்டுகளும் நியமிப்பது போல் மோசமாகக் காட்ட முடியும். ஆனால் இவை இருக்கும்போதே ஆள்கிற கட்சியின் நலன்களுக்கேற்ப வியாபார உற்பத்தித் துறையில் உள்ளவர்களை ஆட்டி வைக்க முடியும். இந்த நாடகங்கள் நாம் கோரும் சீர்திருத்தமாக மாட்டாது. பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டா வழங்குவதில் சர்க்காருக்கு எவ்வித அதிகாரமும் இன்றி, நாட்டின் பொருளாதார இயக்கத்தைப் பூரணமாகப் பிரித்தெடுத்து ஒரு ஸ்தாபனத்திடம் ஒப்படைக்க வேண்டும் என்பதே ஜனநாயகத்தின் தேவை.

பரம நியாயமான இந்தக் கோரிக்கைக்குச் சர்க்கார் இணங்காவிடில் என்ன செய்வது என்பதே கேள்வி. ஒரே வழிதான் எனக்குத் தோன்றுகிறது. சுயராஜ்யம் நடைபெறும் ஒரு நாட்டில் சட்டத்துக்குப் புறம்பான நடவடிக்கைகளை எடுப்பது சம்பிரதாயமல்ல எனினும் ஜனநாயகப் பாதையில் வழியடைப்பாகக் கிடக்கும் பெருந் தடையைச் சட்ட பூர்வமான எதிர்ப்பினால் தகர்க்க முடியாவிடில் சத்தியாக்கிரக நடவடிக்கைகளை நாம் எண்ணிப் பார்க்கவேண்டியிருக்கும். பிரிட்டிஷாரை எதிர்த்து காந்திஜி கையாண்ட நடவடிக்கைகளை நாமும் மேற்கொள்ள வேண்டியிருக்கும்.

நாடு முன்னேற முடியாமல் முட்டுக்கட்டை வளர இடமளித்துவிட்டோம். சட்டமும், சாஸனமும் அறியாமல் திருட்டுத்தனமாக ஜனநாயகத்தின் ஜீவாம்சத்தைச் சர்க்கார் கொல்ல விடலாகாது என்று இப்போது நாம் உணர்வோமாயின் சத்தியாக்கிரக முறையை நன்கு ஆலோசிக்க வேண்டும்.

# நம்பிக்கையில்லாத் தீர்மானம்

ஒரிஸ்ஸா ஊழல்களை மையமாக வைத்து மத்திய சர்க்காரின் மீது எதிர்க் கட்சிகள் கொண்டுவந்த நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறும் என்று மக்கட் சபையிலுள்ள அங்கத்தினரின் கட்சி விகிதாசாரத்தையறிந்த யாரும் எதிர்பார்க்கவில்லை. பட்நாயக், மித்ரா போன்ற காங்கிரஸ் தலைவர்களின் போக்கு எவ்வளவு ஆபாசமாகச் சென்றுவிட்டது என்பதையும், இதை மூடி மறைத்து மழுப்புவதிலேயே மத்திய சர்க்கார் கவனமாக இருக்கிறது என்பதையும் அழுத்தமான முறையில் பகிரங்கப்படுத்த வேண்டும் என்பதே நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் நோக்கம். இந்த நோக்கம் வெகு சிறப்பாக நிறைவேறிவிட்டது என்பதைக் காங்கிரஸை ஆதரிக்கும் எல்லாப் பத்திரிகைகளுமே சாதாரணமாக எடுத்துக் காட்டியுள்ளன.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின்போது வெளியான பலத்த கண்டனங்களுக்கு ஆள்கிற கட்சி ஐயம் திரிபற ஒரு விடையும் கூற இயலவில்லை. ஒரிஸ்ஸா ஊழலைக் குறித்து சட்டபூர்வமான நீதி விசாரணை நடைபெற வேண்டும் என்ற நியாயமான கோரிக்கையைச் சர்க்கார் மறுத்ததற்கும் தக்க காரணம் காட்டப்படவில்லை.

ஊழல்களைப்பற்றி மத்திய பரிசீலனை இலாகா நடத்திய ஆராய்ச்சி நீதிமன்றத்தின் தீர்ப்பாகாது. நீதி விசாரணை நடைபெற வேண்டிய அவசியத்தை எடுத்துக்காட்டும் பூர்வாங்க சோதனையே அந்த இலாகாவின் ஆராய்ச்சி. ஆனால் நீதி நிபுணர்களைக் கொண்டு விசாரிக்க வேண்டிய விவகாரத்தை காங்கிரஸ் மந்திரி சபைக் கமிட்டியே ஆராய்ந்தது. குற்றம் இழைத்தவர்களும் காங்கிரஸ்காரர்கள் என்பதையும், காங்கிரஸின் மானம் கப்பலேறக் கூடாது என்பதில் மந்திரி சபைக்குள்ள அக்கறையையும் கவனிக்கும்போது மந்திரி சபையின் விசாரணை முடிவைப் பட்ச

பாதமற்றது என்று கருத முடியாது. இந்த விசாரணை பகிரங்கமாக நடக்கவில்லை. குற்றம் சாட்டப்பட்டவர்களிடம் சமாதானங்கள் கோருவதிலேயே அதிக கவனம் செலுத்தப்பட்டது.

இத்தகைய சூழ்நிலையில் நீதி நிபுணர்களின் பாரபட்சமற்ற விசாரணை தேவை என்று எதிர்க் கட்சிகள் கருதியது முற்றிலும் நியாயமே. ஆனால் பிரதமர் இதற்கு மறுத்து விட்டார். அரசாங்கத்தின் பிரதம வழக்காலோசகரிடம் (Attorney-General) அனுப்ப வேண்டிய விவகாரத்தைக் கணக்குத் தணிக்கையாளரிடம் விட்டுத் திருப்தி கொள்கிறார் பாரதப் பிரதமர் லால்பகதூர்.

நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறாவிடினும், நீதி விசாரணை நடைபெறாவிடினும் காங்கிரஸின் ஊழல் போக்கு நாட்டுக்கு வெட்ட வெளிச்சமாகிவிட்டது. பார்லிமெண்ட் வோட்டைக் கொண்டு மட்டுமே சர்க்கார் வாழ முடியாது. மக்களின் நம்பிக்கைதான் அரசாங்கத்துக்கு உயிரளிக்கிறது. எல்லா அவயவங்களும் சீராக இயங்கியபோதிலும் இதயம் பழுதுபட்டால் சரீரத்தை விட்டு உயிர் ஓடிவிடுவது போல் சட்ட சபை எண்ணிக்கை யெல்லாம் சர்க்காருக்கு எவ்வளவு அநுகூலமாயிருப்பினும் பொதுமக்கள் நம்பிக்கை இழந்துவிட்டால் அரசாங்கம் உயிரற்ற சவமாகும்.

# ஜெர்மானியக் குழந்தைகளின் கருத்து

சுமார் நூறு கோடி ரூபாய் செலவில் பாரத நாடு முழுவதற்கும் டெலிவிஷன் சாதனங்களைப் பரப்புவதற்கான திட்டங்கள் பரிசீலனையில் இருந்து வருவதாகச் சில தினங்களுக்கு முன் ஸ்ரீமதி இந்திரா காந்தி லோக சபையில் தெரிவித்தார். ஆனால், டெலிவிஷனையும், ரேடியோவையும் விடச் செய்திப் பத்திரிகைகளை அதிகமாக விரும்பும் நாடும் இருக்கிறது! மேற்கு ஜெர்மனி மக்கள் செய்திப் பத்திரிகைகளையே இன்றும் விரும்புகிறார்கள்.

'செய்திப் பத்திரிகை படிப்பது, இதர சஞ்சிகைகள் படிப்பது, டெலிவிஷன் பார்ப்பது, ரேடியோ கேட்பது இந்த நான்கில் ஒன்றைத்தான் நீங்கள் தேர்ந்தெடுக்கலாமெனில் எதை வரவேற்பீர்கள்?' என்ற கேள்விக்கு ஒரு ஸ்தாபனம் ஜெர்மனி மக்களில் கணிசமானவரிடமிருந்து விடை சேகரித்துள்ளது. மக்களில் ஐம்பத்திரண்டு சதவிகிதத்தினர் பத்திரிகைகளைத் தேர்ந்தெடுத்திருக்கின்றனர். இருபத்தியேழு சதவிகிதத்தினர் டெலிவிஷனையும், பதினெட்டு சதவிகிதத்தினர் ரேடியோவையும் ஆதரித்திருக்கிறார்கள். மூன்றே சத விகிதத்தினர்தான் இதர சஞ்சிகைகளைத் தேர்ந்தெடுத்திருக்கின்றனர்!

ஜெர்மனிக் குழந்தைகள் பெற்றோர் தங்களிடம் போதிய கவனம் செலுத்தவில்லை என்று மிகவும் அதிருப்தி தெரிவித்திருக்கின்றன. பல பகுதிகளில் பல நகரங்களில் நடந்த கட்டுரைப் போட்டி, விவாதம் இவற்றில் இந்த உண்மை ஐயமற வெளியாயிற்று. ''அப்பாவுக்கு எங்களைக் கவனிக்க ஏன் பொழுதில்லை?'' என்று அந்நாட்டுக் குழந்தைகள் திரும்பத் திரும்பக் குறைப்பட்டுக் கொள்கின்றன. ''என் தந்தையை விடுமுறை தினத்தில்தான் பார்க்க முடிகிறது; அப்போதும் அவர் காரைக் கழுவி விட்டுக் கால்பந்துப் பந்தயத்துக்கோ, வேறு எங்கோ சென்று விடுகிறார். போகுமிடத்தைக்கூட எங்களுக்குச் சொல்வதில்லை'' என்று ஒரு பெண் குழந்தை விசனப்படுகிறது. ''நான் பெரியவனாகப் போனால் ஞாயிற்றுக்கிழமைகளில் பத்திரிகை படித்துக் கொண்டும், படுக்கையில் படுத்துக் கொண்டும் பொழுதைக் கழிக்க மாட்டேன். என் குடும்பத்தினரை வன போஜனத்துக்கு அழைத்துப் போவேன்; அல்லது வீட்டிலேயே அவர்களுடன் விளையாடுவேன்; அல்லது வீட்டு வேலையில் அவர்களுக்கு ஒத்தாசை செய்வேன்'' என்று ஒரு பிள்ளை கூறியிருக்கிறான். பெற்றோர் பக்கத்திலிருக்கும்போதே பரஸ்பரம் சம்பாஷித்துக் கொள்ளாமல் டெலிவிஷன் செட்டின் முன்பு மௌனமாக உட்கார்ந்து நிகழ்ச்சிகளைப் பார்ப்பதைக் குழந்தைகள் வெறுக்கின்றன. கேள்வி கேட்கப்பட்ட 20,000 குழந்தைகளில் பெரும்பான்மையானவை டெலிவிஷனைப் பலமாகக் கண்டித்தன. குடும்ப வாழ்க்கையை டெலிவிஷன் நாசமாக்குகிறது என்பது குழந்தைகளின் கருத்து.

# என்ன சேதி?

### ஏமாற்று வித்தை!

மத்திய பட்ஜெட்டில் புது வரியே இல்லை; அப்படியிருந்தும் நிதி மந்திரி செலவுக்கு மேல் வரவு காட்டியிருக்கிறார் என்று பல பத்திரிகைகள் சிலாகித்து எழுதியிருக்கின்றன. நிதி மந்திரி தமது ஏமாற்று வித்தையில் ஜயித்து விட்டார்! சென்ற வருஷம் சர்க்காரின் வருமானம் 2,124 கோடி ரூபாய். இந்த வருஷம் இது 2,353 கோடி ரூபாயாக உயர்ந்திருக்கிறது. அப்படியும் வரிச் சுமை ஏதோ குறைந்து விட்டாற்போன்ற மாயையை நிதி மந்திரி உண்டாக்கியிருக்கிறார்.

இன்னொரு விஷயம்: பட்ஜெட்டுக்கு ஒரு வாரம் முன்புதான் நிதி மந்திரி சுங்க வரிகளைப் பத்து சத விகிதங்கள் உயர்த்தினார். இதனால் சர்க்காரின் மதிப்பீட்டுப்படியே ரூ. 60 கோடி வருமானம் கிடைக்கும். எப்போதும் வருமானத்தைக் குறைவாகவும் செலவை அதிகமாகவும் மதிப்பிடுவது சர்க்காரின் வழக்கம்.

எனவே பட்ஜெட்டுக்கு முன்னால் வெளியிட்ட 'குட்டி பட்ஜெட்'டின் மூலம் நிதி மந்திரி கணிசமான வரிச் சுமை விதித்து விட்டார். 'தற்போதுள்ள வரிகளின் விகிதத்திலேயே பத்துக் கோடி ரூபாய் உபரி கிடைக்கிறது' என்று நிதி மந்திரி கூறும்போது, 'தற்போது' என்பது சென்ற ஆண்டு பட்ஜெட்டைக் குறிப்பிடாது; சில வாரங்களுக்கு முன்பு உயர்த்திய சுங்க வரியையும் சேர்த்தே 'தற்போதுள்ள' என்று மனச்சாட்சி கூசாமல் சொல்லியிருக்கிறார். இதனைக் கல்கத்தாவிலுள்ள அரசியல் — சமூக ஆராய்ச்சி நிலையத்தில் கஷ்ரோ ஆர். இரானி என்ற நிபுணர் ஆணித்தரமாக அம்பலப்படுத்தியிருக்கிறார்.

## பிரச்னையைக் குழப்புகிறார்கள்

ஆட்சிமொழிப் பிரச்னையைப் படிப்பாளிகளுக்கும் படிக்காதவர்களுக்குமிடையே உள்ள ஒரு சர்ச்சை போலத் திரித்துப் பிரமுகர்கள் சிலர் எழுதிவருவது மெத்த வருந்தத் தக்கது. ஆட்சி மொழி வேறு, தேசிய மொழி வேறு என்பதை இவர்கள் மறுக்கலாகாது. 'பொது மக்கள் மொழி', 'பாமரர் பாஷை' என்று கூறுகிற வாதமெல்லாம் தேசிய மொழிக்கே பொருந்தும். அப்படிப்பட்ட தேசிய மொழிகள் இந்தியாவில் பதினாறு இருக்கின்றன. தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலிய எல்லா மொழிகளுமே தேசிய மொழிகளாகும்; ஹிந்தி மட்டுமல்ல.

தேசிய மொழிகளான இந்தப் பிரதேச மொழிகளெல்லாம் அந்தந்த ராஜ்யங்களில் ஆட்சி மொழியாக விளங்குவதையும் யாரும் ஆட்சேபிக்கவில்லை. மத்திய ஆட்சிமொழியாக ஒரு பிரதேச மொழி விசேஷ ஸ்தானம் பெறுவதைத்தான் ஆட்சேபிக்கிறோம்.

ஆட்சி மொழி என்பது சர்க்கார் நிருவாகத்துடன் தொடர்பு கொண்டவர்களைப் பொறுத்த விஷயம். இதில் படித்தவர், படிக்காதவர் என்று எவ்விதமான வகுப்புப் பிரிவினையும் கற்பிக்க வேண்டிய அவசியமில்லை. எல்லோருக்கும் பொதுவான ஒரு மொழி மத்திய ஆட்சி மொழியாக இருக்க வேண்டுமா, பல பிரதேச மொழிகளில் ஒன்று மட்டும் அந்த விசேஷ அந்தஸ்தைப் பெற வேண்டுமா என்பதுதான் கேள்வி. இது படித்தவருக்கும் படிக்காதவருக்குமிடையே நடைபெறும் சர்ச்சையல்ல. ஹிந்தியை ஆட்சி மொழியாக்குவதால் மத்திய சர்க்கார் நிர்வாகம் படிப்பாளிகளிடமிருந்து படிக்காதவர்கள் கைக்கு மாறும் என்று யாரேனும் எண்ணினால் அது வெறும் பிரமையேயாகும். மொழியை மாற்றுவதால் அரசாங்கம் தீர்க்க வேண்டிய பிரச்னைகள் மாறிவிடாது.

## ஒப்பில்லாத உப்பிலியப்பன்

'பச்சிலையோ, பூவோ, பழமோ, நீரோ எதை எனக்குப் பக்தியுடன் அளித்தாலும் நான் அதை ஏற்றுக்கொள்கிறேன்' என்று பார்த்தனிடம் கூறிய பரந்தாமன் தமிழகத்தில், தஞ்சை மாவட்டத்தில், திருநாகேசுவரத்துக்கு அருகிலுள்ள விண்ணகரத்தில் 'எனக்கு உப்பு இடாமல் சுவையற்ற உணவைப் படைத்தாலும் ஏற்று அருள் புரிகிறேன்' என்று கூறி உப்பிலியப்பனாக எழுந்தருளியிருக்கிறான். இந்தப் பெருமானை 'என்னப்பன்', 'பொன்னப்பன்', 'மணியப்பன்', 'முத்தப்பன்', 'திருவிண்ணகர் சேர்ந்த அப்பன்', 'தன் ஒப்பார் இல் அப்பன்' என்றெல்லாம் நம்மாழ்வார் மனம் கசிந்து பாடுகிறார். தன் ஒப்பார் இல் அப்பனை ஒப்பிலியப்பன் என்று நாமும் கூறி நமஸ்கரிக்கிறோம்.



பொய்கையாழ்வார், பேயாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் நால்வரும் மங்களாசாஸனம் செய்த வைணவப்பதி உப்பிலியப்பன் கோயில். பூதேவியோடு விளங்கும் ஸ்ரீநிவாசப் பெருமான் இத்தலத்தைத் திருப்பதியைப் போன்ற பிரார்த்தனை ஸ்தலமாக்கி அருள்புரிகிறார். புகழ் வாய்ந்த இந்த ஆலயத்தின் விமானம், கோபுரம், பிராகாரம் முதலியன பழுது பார்க்கப்பட்டு, வருகிற பங்குனி 25ந் தேதி (ஏப்ரில் 7) கும்பாபிஷேகம் நடைபெறவிருக்கிறது. பல்லாண்டுகளுக்குப் பின் நடைபெறும் கும்பாபிஷேகத்தை சாஸ்திரோக்தமாக வெகு விமரிசையுடன் கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இத்திருப்பணியில் அடியார்கள் யாவரும் ஈடுபடவேணும். திரவிய கைங்கரியம் செய்ய வேண்டிய முகவரி: **பொக்கிஷதார், திருப்பணிக் கமிட்டி, ஸ்ரீ வேங்கடாசலபதி தேவஸ்தானம், உப்பிலியப்பன் கோவில், திருநாகேசுவரம் போஸ்ட், தஞ்சை மாவட்டம்.**




❊ வேலையற்ற டிராக்டர்கள்

❊ இஸ்ரேல் உதாரணம்

❊ காந்திஜியின் கருத்து

**நா**ற்பதினாயிரம் டிராக்டர்களில் இருபதினாயிரம் டிராக்டர்களுக்கு உபகரணமின்றி அவை வேலையற்றுக் கிடக்கின்றன என்று செய்தி கூறுகிறது. இந்திய சர்க்காருக்கு நாட்டை ஆளத் தகுதி இல்லை என்பதற்கு இது ஒரு சான்றே போதும். தன்னால் ஆற்ற முடியாத பொறுப்பை அறிவுள்ள எவரும் ஏற்க மாட்டார்கள். 'இருநூறு லட்சம் விவசாயிகள் கவனித்து வந்த விவசாயத்தை நாங்கள் நடத்துவோம்' என்று சர்க்கார் தலையிட்டு அந்தப் பொறுப்பைச் சிறிதும் ஆற்றாமல் போனதைத்தான், வெப்பமானியில் பாதரஸம் ஏறி ஜுரத்தைக் காட்டுவது போல் வேலையற்றுக் கிடக்கும் இருபதினாயிரம் டிராக்டர்களும் உணர்த்துகின்றன. சோஷலிஸ பாணி சரியா தப்பா என்பது ஒருபுறமிருக்கட்டும். சர்க்கார் தனது லட்சியமாகக் கூறிய சோஷலிஸ பாணி வெறும் விளையாட்டல்ல. தனிப்பட்ட விவசாயிகள் யாவரும் சேர்ந்து காட்டிய திறமையையும் ஊக்கத்தையும் சர்க்காரே காட்ட வேண்டிய கடினப் பொறுப்பு வாய்ந்த விஷயம் 'சோஷலிஸ பாணி'. இதைச் சர்க்கார் புரிந்து கொள்ளாததன் விளைவுதான் 20,000 டிராக்டர்கள் பயனற்றுக் கிடக்கும் விபரீத ஹாஸ்ய நிலை.

உண்மையாகவே டிராக்டரை உபயோகிப்போருக்கு உபகரணங்கள் வாங்க லைசென்ஸ் வழங்கும் முறையைத் தொடங்குவதால் பிரச்னையைத் தீர்த்து விடலாமெனச் சர்க்கார் நினைக்கிறது. இது பிரச்னையைத் தீர்க்காது. லைசென்ஸ் விண்ணப்பங்களுக்கும் டிராக்டர்களுக்கு ஏற்பட்ட கதிதான் ஏற்படும். லைசென்ஸ் பெறுவது ஒரு செழிப்பான வியாபாரமாகி விடும்.

டிராக்டர் உபகரணத்துக்கு லைசென்ஸ் கோராதது உண்மையில் பிரச்னையல்ல. விவசாயிகள் ஏன் அப்படிக் கோரவில்லை என்பதே உண்மை நிலையை விளக்கும். சிறு சிறு துண்டங்களாகிய நில உடைமைகளில் டிராக்டர் உபயோகமாக மாட்டாது. ஒருபுறம் நில உச்ச வரம்புக்கும் மறுபுறம் இயந்திர முறை விவசாயத்துக்கும் சர்க்கார் ஆசைப்படுவது பொருந்தாது. பெரிய பண்ணைகளில்தான் டிராக்டரை உபயோகிப்பது லாபகரமாக இருக்கும்.

அடுத்த வீட்டுக்குப் போவதென்றால் நடந்து போவதே சுலபம். காரை ஷெட்டிலிருந்து எடுப்பதும் பக்கத்து வீட்டுக்குப் போவதற்குள் திருப்புவதும் நிறுத்துவதும் சிரமம். சிறிய காரியங்களுக்குச் சிறிய முதலீடுதான் பொருந்தும். டிராக்டர் உபயோகிக்க வேண்டுமானால் அதனுடைய சக்தியைப் பயன்படுத்திக்கொள்ளத் தக்க நில உடைமை வேண்டும். சட்ட பூர்வமாகச் சின்னாபின்னம் செய்த நில உடைமைகளோடு டிராக்டர்களைச் சேர்த்துப் பார்ப்பது பொருத்தமற்ற ஜோடியாகும்.

❊❊❊

சிறிய நில உடைமைகளில் உற்பத்தியைப் பெருக்க பம்பாயில் உள்ள இஸ்ரேல் தூதர் பி. கார்டன் அவர்கள் வழி கூறுகிறார். எனக்கு எழுதியுள்ள கடிதமொன்றில் தமது தாய்நாட்டின் உதாரணத்தை அவர் எடுத்துக்காட்டுகிறார்.

சிறிய நில உடைமைகளில் சாதாரணக் கலப்பைக்குப் பதில் டிராக்டரை உபயோகிப்பது போன்ற பெரும் மாறுதல் தேவையில்லை; கலப்பையின் கொழு முனைக்குப் பதில் நல்ல கூர்மையான வெட்டுக் கத்திகள் உபயோகிப்பது போன்ற சிறிய மாறுதல்களாலேயே விளைச்சலில் நல்ல பெருக்கம் காணலாம் என்று கார்டன் அவர்கள் கூறுகிறார். அதிக முதலீடு தேவைப்படாத சிறு சிறு மாறுதல்கள் மூலமே இஸ்ரேலில் சென்ற பத்தாண்டுகளில் உணவு உற்பத்தி மும்மடங்கு ஆகியிருப்பதாயும், முன்பு சுயதேவையையே பூர்த்தி செய்ய இயலாதிருந்த இஸ்ரேல் இப்போது வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்வதாகவும் அவர் கூறுகிறார். வெளிப் பார்வைக்குப் படாடோபமாகத் தோன்றாமல், உழவுக் கருவிகளில் சிறு சிறு மாறுதல்கள் செய்வதாலும், நீர்ப்பாசனத்தில் நவீன முறைகளைக் கையாள்வதாலும், ஓரளவுக்கு ரசாயன உரம் உபயோகிப்பதாலும், வெவ்வேறு தானியங்களை மாற்றி மாற்றிப் பயிர் செய்வதாலும், விதைகளைப் பொறுக்குவதில் அதிக கவனம் செலுத்துவதாலும் இந்தியாவின் உணவுப் பிரச்னையைத் தீர்க்க முடியும் என்பது இஸ்ரேல் தூதரின் கருத்து. அதிகச் செலவின்றியே இஸ்ரேல் உணவு உற்பத்திக்குக் காட்டிய வழியை மத்திய கிழக்கிலும், ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும், லத்தீன் அமெரிக்காவிலும் நாற்பதுக்குமேற்பட்ட நாடுகள் பின்பற்றிப் பயன்

அடைந்திருக்கின்றன. இந்த எளிய முன்னேற்ற முறையை இந்தியாவும் ஏன் பின்பற்றக்கூடாது என்று இஸ்ரேல் தூதர் கேட்கிறார்.

ஃஃஃ

தற்போதுள்ள அரசியல் பிரச்னைகளையெல்லாம் தீர்க்கும் வழி இவ்விஷயங்களில் காந்தியடிகள் சொன்னது என்ன என்று அறிந்து அதைப் பின்பற்றுவதேயாகும் என்று அறிவாளிகளும் கருதுகிறார்கள். காந்தியடிகள் எந்தச் சந்தர்ப்பத்தில் தமது கருத்துக்களை வெளியிட்டார் என்பதைப் பாராமல் அவற்றை நிகழ்கால அரசியலுக்கு அப்படியே பொருத்துவது சரியல்ல. சர்க்கார் மிகக் குறைந்த அதிகாரம் பெற்றிருக்க வேண்டும் என்று காந்திஜி கருதினார். இன்று இருப்பதைப் போல் விஸ்தாரமான, சிக்கலான மத்திய சர்க்கார் அமைப்பையும், ராஜ்ய சர்க்கார் அமைப்பையும் அவர் ஒரு போதும் விரும்பவில்லை. தாம் விரும்பிய அரசியல் பின்னணிக்கு ஏற்பப் பல திட்டங்களையும் கருத்துக்களையும் அவர் கூறிவந்தார். இன்றோ காந்திஜி கூறியதற்கு முற்றிலும் மாறாக காங்கிரஸ் அரசாங்கம் கம்யூனிஸ சர்க்கார் போல் மகத்தான அதிகாரம் பெற்றுள்ளது. அவர் முக்கியமாகக் கருதிய அரசாங்க அமைப்பை நாம் பின்பற்றாமல், அது குறித்து அவர் கொண்டிருந்த மற்றக் கருத்துக்களை இன்றைய ஆட்சி முறைக்குப் பொருத்துவது உசிதமல்ல.

ஃஃஃ

'ஹிந்தியை எதிர்க்கிறவர்கள் ஏன் ஆங்கிலத்தை ஆதரிக்க வேண்டும்? தமிழையோ, தெலுங்கையோ, கன்னடத்தையோ ஆதரிப்பதுதானே?' என்று சிலர் கேட்கிறார்கள். எந்தக் காரணத்துக்காக ஹிந்தி ஆட்சி மொழியாகக்கூடாது என்று கோருகிறோமோ, அதே காரணத்துக்காகத்தான் நம்முடைய பிரதேச மொழியையும் அகில இந்திய ஆட்சி மொழியாக்க நாம் கோரவில்லை. 'ஹிந்தி ஒரு பிரதேச மொழிதான்; அதை அரசாட்சிப் பொதுமொழியாக்கினால் பட்சபாதம் ஏற்படும்' என்கிற வாதம் தமிழ், தெலுங்கு, கன்னடம் எல்லாவற்றுக்குமே பொருந்தும். ஹிந்தியர்கள் பகுத்தறிவின்றிச் செய்யும் திட்டத்துக்கு எதிராக நாமும் பகுத்தறிவின்றிச் செயல்பட வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள் போலும்!

ஃஃஃ

ஹிந்தியை ஆட்சிமொழியாக்கும் சாஸனத்தின் பதினேழாவது பிரிவை ரத்து செய்தால் பிரதேச மொழிகளை அந்தந்த ராஜ்யங்களின் நிருவாக மொழியாக்கும் உரிமையும் ரத்தாகிவிடும் என்கிறார்கள். இது ஆதாரமற்ற பேச்சாகும். ஆங்கிலமும், பிரதேச மொழிகளும் இதுவரை அரசியல் வாழ்வில் இடம் பெற்றதற்குக் காரணம் அரசியல் சாஸனமோ, சட்டமோ அல்ல. இயற்கையான முறையில் சௌகரியத்தையும், பகுத்தறிவையும், நீண்ட கால சம்பிரதாயத்தையும் ஒட்டி மொழிகள் தங்களுக்குரிய அந்தஸ்தைப் பெறுகின்றன. பழைய அரசியல் சட்டத்தில் மொழியைப் பற்றி ஒரு விதியும் இருந்ததில்லை. பதினேழாம் பிரிவு ரத்தாகிய பின்னும் ராஜ்யங்கள் பிரதேச மொழிகளில் நிருவாகம் நடத்துவதற்கு எந்தத் தடையும் இல்லை. பதினேழாம் பிரிவில் ராஜ்யங்களின் நிருவாக மொழி பற்றிக் குறிப்பிடுவதற்கு அவசியம் ஏற்பட்டதே ஹிந்திக்கு மத்திய சிம்மாதனம் அளித்ததால் தான். பதினேழாவது பிரிவை ரத்தாக்குவதால் பிரதேச மொழிகளின் ஆட்சி உரிமைக்குத் தீங்கு விளையுமென நமக்காக காங்கிரஸார் பயப்பட்டால் குறிப்பிட்ட ஷரத்தை மட்டும் ரத்தாக்காமல் பின்பற்ற எவ்விதத் தடையும் இல்லை.

ஃஃஃ

பயத்தின் இடத்தில் தீரத்தையும், தளர்ச்சியின் இடத்தில் திட சங்கல்பத்தையும் 'நடப்பது நடந்தே தீரும்' என்று விட்டுக்கொடுக்கிற இந்திய மனப்பான்மைக்குப் பதிலாக அழியாத நம்பிக்கையுடன் வெற்றிக்காகப் போராடும் திறனையும் காந்தியடிகள் நாட்டுக்கு உணர்த்தினார். அதே சமயத்தில் அவர் தீவிரமாகத் தொடங்கிய ஒரு போராட்டத்தை நிறுத்தத்தான்வேண்டுமென்ற சூழ்நிலை ஏற்பட்டால் சிறிதும் தயங்காமல் நிறுத்திவிடவும் தைரியம் பெற்றிருந்தார். தமது அடிப்படை இலட்சியத்துக்கு விரோதமாக இயக்கம் செல்லுமாயின் தயங்காது பின்வாங்கிக் கொண்டுவிடுவார்.

பிரதேச மொழியொன்றை அகில இந்திய ஆட்சி மொழியாகத் திணிக்கும் திட்டத்தை எதிர்த்து மாணவர்களே சுயமாகச் செய்த போராட்டம் இந்தியாவின் ஐக்கியத்தை ஒரு நெருக்கடியில் காத்த ஒப்பற்ற செயல் என்று சரித்திரம் கூறும்.

பௌதிக பலத்தின் மீது அமையாமல், தியாகத்தின் மீது அமைகிற எல்லா இயக்கங்களும் மனித மனப்பாங்கை அதிகமாகக் கவனித்து நடத்தப்பட வேண்டும். மாணவர்கள் நடத்திய எதிர்ப்பு மகத்தான நற்பலனை அளித்துவிட்டது. இதனை யாருமே மறுக்க முடியாது. எதிர்க்கும் ஆற்றலிலும், தியாகம் செய்ய முன்வரும் மனப்பான்மையிலும் ஏற்பட்டுள்ள ஏற்றத் தாழ்வுகள் காரணமாக கூட்டுப்பூசலால் ஏற்படும் ஒழுங்கீனத்தில் இயக்கம் முடியக்கூடாதெனில் போராட்டத்தை நிறுத்தி வைத்துவிட வேண்டும். இதனால் ஹிந்தி எதிர்ப்பைக் கைவிட்டதாகப் பொருளாகாது. இளைஞர்களின் நலனையும், கௌரவத்தையும் காக்கக் கடமைப்பட்ட பெரியவர்கள் தங்கள் பொறுப்பைச் செய்யத் தவறினால் இளைஞர்கள் மீண்டும் போராட்டத்தைத் தொடங்கலாம். அதுவரை காந்திஜி சுயராஜ்ய இயக்கங்களையும், தீண்டாமை எதிர்ப்பு உபவாசங்களையும் அவ்வப்போது நிறுத்தியதுபோல் போராட்டத்தை நிறுத்தி வைக்க வேண்டும். இது இயக்கத்தைப் பலவீனப்படுத்தாது; அதன் அடிப்படையை மேலும் விரிவாக்கவும், வலிவாக்கவுமே உதவும்.

# சுதந்திரத் துறைமுகம்

தொழில் வளத்தை, முக்கியமாக அயல்நாட்டு ஏற்றுமதி வாணிபத்தைப் பெருக்க எடுத்துக் கொள்ளப்படும் பல்வேறு நடவடிக்கைகளில் சுதந்திரத் துறைமுகத்தை ஏற்படுத்துவதும் ஒன்று. இவ்வகையில் பாரதம் சுதந்திரமடைந்தபின் நிறுவப்பட்ட முதலாவது சுதந்திரத் துறைமுகம் குஜராத் ராஜ்யத்தைச் சேர்ந்த காண்ட்லா துறைமுகப் பகுதி. இதைச் சமீபத்தில் லால் பஹாதூர் தொடங்கி வைத்தார்.

காண்ட்லா ஒரு சிறிய துறைமுகம். கட்ச் வளைகுடாவில் உள்ளது.

கராச்சித் துறைமுகம் பாகிஸ்தானுக்குச் சேர்ந்து விட்டபின்னர் தான் இந்தச் சிறிய துறைமுகத்துக்கு யோகம் அடித்தது.





மஹாராஷ்டிர ராஜ்யம் தனித்துப் போன பின் காண்ட்லா துறைமுகத்தின் முக்கியத்துவம் மேலும் அதிகரித்து விட்டது. வடக்கு, மத்திய குஜராத், ராஜஸ்தான், மத்தியப் பிரதேசத்தின் மேற்குப் பகுதி, உத்தரப் பிரதேசத்தின் மத்திய, மேற்குப் பகுதிகள், பஞ்சாப், காஷ்மீர் பிராந்தியங்களிலிருந்து வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட வேண்டிய பொருள்கள் காண்ட்லா மூலம்தான் இப்போது போகின்றன.

துறைமுகம் என்றால் பல வசதிகள் ஒருங்கே இருத்தல் அவசியம். இவையெல்லாம் காண்ட்லா துறைமுகத்தில் சீராக அமைந்துள்ளன. இதைத் தவிர, வாணிபம் பெருகினால், வசதிகளைப் பெருக்கவும் விஸ்தாரமான நிலப் பரப்பு இத் துறைமுகப் பகுதியைச் சேர்ந்தாற்போல் இருக்கிறது.



இந்த வசதி இருப்பதால்தான் காண்ட்லாவை அணுகினாற்போல் ஒரு சுதந்திரத் துறைமுகப் பகுதியை ஏற்படுத்த வாய்ப்பு இருக்கிறதென்று கருதப்பட்டது.

துறைமுகம் தனி; துறைமுகச் சுதந்திரப் பகுதி தனி. துறைமுகத்தில் நடைபெறும் நாட்டின் ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகம் நாட்டின் சுங்கவரிக் கட்டணங்களுக்குட்பட்டுத்தான் நிகழும். அதாவது இறக்குமதிப் பொருள் நாட்டுக்குள்ளே கொண்டு வரப்பட்டால் அதற்குள்ள வரி விகிதங்களைச் செலுத்திவிட்டு, இதர சட்டதிட்டங்களின் படிதான் வர அனுமதிக்கப்படும். ஏற்றுமதியும் அப்படியே. ஆனால் துறைமுகச் சுதந்திரப் பகுதிக்கு மட்டும் சுங்கவரி செலுத்தாமல் சரக்குகள் கொண்டு வரப்படலாம். அங்கேயே, அதாவது அந்தப் பகுதி எல்லைக்குள் தனியார் தொழிலதிபர்கள் தொழில்களை ஆரம்பித்து நடத்தலாம். அந்தத் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்கு 'எக்ஸைஸ் வரி'யும் விதிக்கப்படமாட்டாது. ஆகவே தொழிலமைப்புக்கும் தொழிற்சாலை நிறுவனங்களுக்கும் தேவைப்படும் வெளிநாட்டு யந்திரங்களையும் மற்ற பொருள்களையும் வரி கொடுக்காமல் கொண்டு வரவும், அந்தப் பகுதியிலேயே உற்பத்தி செய்யப்படும் பொருள்களை வரி செலுத்தாமல் ஏற்றுமதி செய்யவும் இப்பகுதியிலுள்ள தொழில்களுக்குச் சலுகையளிக்கப்படுகிறது. இதனால்தான் இப்பகுதியைத் 'துறைமுக சுதந்திரப் பகுதி' என்கிறோம்.

இந்தச் சலுகை கேட்பதற்கு மிகச் சாமானியமாகத் தோன்றும். ஆனால் செயல்முறையில் இதற்கு இணையான சலுகையே இல்லை என்று சொல்ல வேண்டும். தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்படும் எந்தப் பொருளையும் கவனித்தால் அதனுடைய விலையில் பாதியாவது சுங்க வரி, எக்ஸைஸ் வரி இந்த இரண்டு வரிகளினால் ஏற்பட்ட சுமை என்பது விளங்கும். சில இனங்களில் விலையில் முக்கால் பாகம்கூட வரிப் பளுவினால் ஏற்படுவதும் உண்டு. இவ்விரண்டு வரிகள் கொடுக்க வேண்டாம் என்றால் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் விலை ஒன்றுக்குப் பாதியாகக் குறைந்து விடும். உதாரணத்துக்குச் செல்வம் கொழிக்கும் ஹாங்காங் நகரத்தையும், சிங்கப்பூர் நகரத்தையும் பார்த்துக் கொள்ளலாம். ஸ்விட்ஜர்லாந்து கைக் கடிகாரங்களும், ஜப்பான் டிரான்ஸிஸ்டரும், டேப் ரிக்கார்டர்களும் இவ்விரண்டு சுதந்திரத் துறைமுகப் பகுதிகளிலிருந்து எவ்வளவு மலிவு விலையில் கொண்டு வர முடியும் என்பது தெரிந்த விஷயமே.

காண்ட்லா சுதந்திரத் துறைமுகப் பகுதியிலும் இம்மாதிரி குறைந்த விலையில் ஏற்றுமதிக்கு ஏற்றதாக உள்ள பொருள்களை உற்பத்தி செய்யவும், அங்கிருந்து வெளிநாடுகளுக்கு அவற்றை ஏற்றுமதி செய்து நாட்டுக்குத் தேவையான அந்நியச் செலாவணியைச் சம்பாதிக்கவும் இப்போது வகை செய்யப்பட்டிருக்கிறது. காண்ட்லா துறைமுகத்துக்கு ஆறு மைல்களுக்கப்பாலும், காந்திதாம் என்ற புது நகரத்துக்கு மூன்று மைல் தொலைவிலும் உள்ள பகுதியில் சுமார் 1500 ஏக்கர் நிலப் பரப்பு இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. இங்கே, கிண்டி தொழிற்பட்டறையைப் போல, 185 தனித் தொழில்களுக்குப் பிளாட்டுகள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. முப்பது வருஷக் குத்தகைக்குப் பிளாட்டுகள் ஏற்றுமதியாளர்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் மலிவான விகிதத்தில் விடப்படும்.

இங்கே சுலபமாக நிறுவிச் செழிக்கக்கூடிய தொழில்கள் சிறு ரக என்ஜினீயரிங் தொழில்கள், பாத்திர வகைகள், தயாரித்த ஆடைகள், சித்திர வேலைப் பொருள்கள் முதலியவை. பெரிய நிறுவனங்கள் அவசியமில்லாமல், ஏற்றுமதிக்கு வாய்ப்புள்ள — பொருள்களைக் குறைந்த செலவில் தயாரித்து லாபகரமாக வாணிபம் செய்ய இந்தப் பகுதி வாய்ப்பளிக்கிறது.

உற்பத்தி செய்யும் பொருள்களுடன், வெறும் வர்த்தகத்தில் மட்டும் ஈடுபட விரும்புபவர்களும், நாட்டின் தொழில் அபிவிருத்திக்கு அவசியமான யந்திரச் சாமான்களையும் மூலப் பொருள்களையும் சுலபமாகக் கிடைக்காத சாமான்களையும் இறக்குமதி செய்து சேமித்து வைக்கவும் இப்பகுதி பயன்படும். லைசென்சு, கோட்டா முறை நமது பொருளாதாரத்தில் நிரந்தரமாக இடம் பெற்று விட்டமையாலும், லைசென்சு பெற்று விட்டாலும், இறக்குமதி செய்யக் காலதாமதம் ஆவதால், சுதந்திரத் துறைமுகப் பகுதியில் தயாராக முன்கூட்டிச் சேமித்து வைப்பதன் மூலம், சுலபமாக அவற்றைத் தருவித்துக் கொள்ளத் தோதாகவும் இந்தப் பகுதி அமையும். ஏற்றுமதிக்கில்லாமல் நாட்டுக்குள் எந்தச் சாமான் கொண்டு வரப்பட்டாலும் அதற்குண்டான வரிவிகிதங்களைச் செலுத்தியாக வேண்டும். ஆகையால் கள்ளக் கடத்தலுக்கு இந்தப் பகுதி ஏற்றதாக அமைந்து விடுமோ என்ற ஐயத்துக்கு இடமில்லை. சட்டத்தை மீறிச் செய்யப்படும் எந்தச் செயலையும் தவிர்க்கப் போதிய பாதுகாப்புகள் செய்யப்பட்டே இருக்கின்றன. எக்ஸைஸ் வரிகள், சுங்க வரிகள் இவை தவிர மற்ற வரிகளையெல்லாம் நாட்டின் பிற பகுதிகளில் உள்ளோர் போலவே இங்குள்ளவர்களும் செலுத்த வேண்டும். அதேபோல் தொழிற்சாலைகள் ஆரம்பித்து நடத்துவதற்கான விதிமுறைகள் பலவும் நாடு முழுமைக்கும் பொதுவானவை தான். ஆகவே சுதந்திரத் துறைமுகம் அப்படியொன்றும் முழுக்க முழுக்கச் சுதந்திரமாக இயங்குவதல்ல என்பது புரியும்.

காண்ட்லா சுதந்திரத் துறைமுகத்தை வளமுள்ளதாகச் செய்து அதன் மூலம் அந்த வட்டாரத்தையே செல்வம் கொழிக்கும்படி செய்வது வர்த்தக சமூகத்தினரின் சுறுசுறுப்பைப் பொறுத்தது. நாட்டின் முதலாவது என்ற வகையில் இங்கே கிடைக்கும் அனுபவத்தின் அடிப்படையில் இதர பாகங்களிலும் இம்மாதிரி சுதந்திரத் துறைமுகப் பகுதிகளை அமைத்தால் தென்னாட்டின் பொருளாதார நிலை இப்போதுள்ளதைக் காட்டிலும் வேகமாகவும் சுறுசுறுப்பாகவும் வளர வாய்ப்புகள் உண்டு. —எம். எஸ். சிவஸ்வாமி



# மறைகளுக்கு ஒரு மஹோற்சவம்

எல்லாப் பொருள்களுக்குள்ளும் உறையும் இறைவன் ஒவ்வொரு பொருளில் ஒவ்வொரு குணத்தை வெளிப்படுத்துகிறான். பாம்பின் பல்லில் விஷமாக உறையும் இறைவன் மாட்டின் மடியில் அமுதமாக நிற்கிறான். வேப்பங்காயில் கசப்பாக நிற்கும் கடவுள் கரும்பில் தீஞ்சுவையாக ஊறி உறைகிறான். தங்கத்தில் பிரகாசிப்பவன் இரும்பில் கருமையாகத் தோய்கிறான்.

இவையெல்லாம் கண்ணுக்குப் புலப்படும் பிரபஞ்சத்தைக் குறித்த விஷயங்கள். காதுக்குப் புலப்படும் பிரபஞ்சமும் ஒன்றுண்டு. சொற் பிரபஞ்சத்திலும் இறைவன் பல ரூபங்களில் உறைகிறான் — அதிலும் விஷமும் அமுதமும், கசப்பும், இனிப்பும், ஒளியும் இருளும் உண்டு. ஆனால் இதை நம் காதுகளாலோ ஸூக்ஷ்ம தரிசனக் கருவியாலோ கிரகிக்க முடியாது. பரம ஞானிகளின் உள்ளத்துக்குத்தான் சொற் பிரபஞ்சத்தின் சொரூபம் முழுவதும் தெரியும்.

அவ்வாறு நாத லோகத்தின் உள் தன்மையை உணர்ந்த முனிவர்கள் ஆன்மானுபவத்தின் உருவமாகவே அமைந்த வேத மந்திரங்களைக் கண்டு நமக்கு அளித்திருக்கின்றனர். 'வேத மந்திரங்களுக்கு மட்டும் எப்படித் தனியாற்றல் இருக்க முடியும்? ஈசனுக்கு எல்லா மொழிகளும் பொதுதானே?' என்று சிலர் எண்ணக்கூடும். ஈசனுக்கு எல்லா வஸ்துக்களும் பொதுதான். எனினும் அவன் ஏன் பல்வேறு கனிகளில் பல்வேறு சுவையாக நிற்க வேண்டும்? மாட்டின் மடியில் அமுதமாக நிற்பது போலவே அவன் மறைகளின் முடியில் அமுதமாக நிற்கிறான். அவனது பாதத்திலிருந்து பெருகும் அமுதம் மறைகள் முழுதும் ஊறிச் செல்கிறது. இதுவே வேதங்களின் பெருமை.

எல்லாத் தழைகளிலும் ஈசன் உறைந்தாலும் மருத்துவச் சத்துள்ள பச்சிலையைப் பிழிந்து ரசமெடுத்தால் தான் நோவு தீரும். எல்லா மொழிகளிலும் ஈசன் உறைந்தாலும் வேத மந்திரங்களை வளர்த்தால்தான் உள்ளத்தின் நோவு தீரும். ஏன், உடலின் நோவு நாட்டின் பீடை இவற்றைக் கூட வேத மந்திர ஜபம் தீர்த்து வைக்கச் சக்தி பெற்றிருக்கிறது. வேதத்தின் மகத்துவம் ஈசனே அமைத்





து தந்தது; மானுடர் அமைத்துத் தந்ததல்ல. வேதங்கள் தோன்றிய காலத்தை யாரும் அறிந்திருக்கவில்லை. ஆண்டவன் உள்ள காலமாக அவனது மூச்சுக் காற்றாகிய வேதமும் உண்டு. ஆண்டவனின் சர்வ வியாபகத்தை நன்கு உணர்ந்த பெருமக்கள் ஆனந்தமயமாக இக உலக வாழ்வின் சகல அம்சங்களிலும் பரதத்துவத்தை உணர்ந்து அநுபவித்து வாழ்ந்த காலத்தை வேதங்கள் உணர்த்துகின்றன. சர்வ லோகங்களையும் ஒரு குடும்பமாகக் கருதி இயற்கை சக்திகளுடனும் தேவ சக்திகளுடனும் பரமாத்மாவுடனும் நேருக்கு நேர் தொடர்பு கொண்டு வாழ்ந்த அற்புத மக்களின் வாழ்முறையை வேதம் விளக்குகிறது.

இன்று அந்த அற்புத மக்களும் இல்லை; அவர்களின் வாழ்முறையும் இல்லை. அவ்வாழ்முறை உறைந்த மறைகளும் மறைந்தே போகும் நிலைக்கு வந்து விட்டன. ஆயிரமாயிரம் ஆண்டுகளாகப் பரம்பரை பரம்பரை

## பாரதப் பண்பின் இதயமாகிய வேதத்தை நமது தலைமுறையின் அஜாக்கிரதையினால் இழந்து விடலாமா ?







மாம்பலம் செவிஷ்ணு ஆலயத்தில் நிகழ்ந்த இரண்டாவது வேத சம்மேளனத்துக்குப் பல வேத விற்பன்னர்கள் வந்திருந்தனர். மைசூர் மகாராஜாவும் விழாவில் கலந்து கொண்டார்.

யாக வாய்மொழிச் செல்வமாக வந்து உலகை வாழ்வித்த வேதங்கள் காலதசையில் க்ஷீணத்தை அடைந்து விட்டன. வேதமோதுவதென்பது வாழ்வின் ஓர் அம்சமாக மட்டும் இருக்க முடியாது. அதுவே முழு வாழ்வாகவும் அமைந்த சிலர் இருந்தால்தான் வேத உணர்வில் வேறு உணர்வுகள் கலக்காமல் அதனைக் காக்க முடியும். இவ்வாறு வேதத்தில் ஊறி வாழ்ந்தவர்கள் அதனை வம்சாவளியாகப் புகட்டி வந்தார்கள். அவர்களுக்கு அரசர்களின் மான்யங்கள் கிடைத்ததால் ஜீவனோபாயத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமிருக்கவில்லை. ஆனால் மெல்லக் காலம் மாறிக் கொண்டே வந்து கடைசியில் தலைகீழாகி விட்டது. வேதமோதுபவர்கள் ஜீவனோபாயத்துக்குத் திண்டாட





வேண்டிய நிலை ஏற்பட்டதன் விளைவாக வேதங்கள் மங்கத் தொடங்கின.

பாரத தேசத்திலேயே வருங்கால சந்ததியில் முறைப்படி வேதம் பயிலும் வித்யார்த்திகள் எண்ணூற்றைம்பதுக்கு மேலே இல்லை எனத் தெரிகிறது. நாற்பத்தைந்து கோடி ஜனத் தொகையில் ஐந்து லட்சத்துக்கு ஒருவர்தான் நம் தருமக் கருவூலத்தைப் பயிலுகிறார்கள்! இவர்களில் தமிழகத்தில் சுமார் இருநூற்றைம்பது பேர் இருக்கிறார்கள். தற்காலம் தமிழகத்தில் வேதபாராயணம் செய்யக் கூடியவர்கள் நூறுக்கு மேல் இல்லை.

இச்சூழ்நிலையில் மங்கிய வேதங்களைப் பொங்கச் செய்ய வேண்டும் என்று பல மகான்கள் திருவுளம் கொண்டுள்ளனர். பாரதப் பண்பின் இதயமாகிய வேதத்தை நமது தலைமுறையின் அஜாக்கிரதையால் இழந்துவிடக் கூடாது என்பதற்காக அம் மகான்கள் முயற்சி எடுத்து வருகின்றனர். இத்தகைய முயற்சிகள் எவ்வளவு தூரம் பலனளித்துள்ளன என்பதற்கு ஒரு சிறப்புச் சான்றாக பிப்ரவரி 24ந் தேதி முதல் 28ந் தேதி வரை சென்னை சிவ — விஷ்ணு ஆலயத்தில் ஓர் அற்புதமான வேத சம்மேளனம் நடைபெற்றது.

சம்மேளனத்துக்குத் தமிழ் நாட்டிலிருந்து ரிக் - ஸாம - யஜுர் வேத கனபாடிகள் சுமார் நூறு பேர்களும் மதராஸ் ஸம்ஸ்கிருதக் கல்லூரி ஆசிரியர்களும், ஆசார்ய ஸ்வாமிகளால் 'தர்மக்ஞ' பிருது அளிக்கப்பட்ட நால்வரும், ஷஷ்டி அப்த பூர்த்தி டிரஸ்ட் வேத பாஷ்ய பரீக்ஷை கொடுத்து சம்பாவனை வாங்கின பதினாறு பேர்களும் வேத ரக்ஷண நிதி டிரஸ்ட் ஆதரவுபெற்ற பாடசாலைகளில் பதினாறு பாடசாலைகளிலிருந்து சுமார் 65 வித்யார்த்திகளும் வந்திருந்தார்கள். பிட்சை எடுத்துப் புராதன முறையில் குருகுலவாசம் செய்து அத்யயனம் செய்து வரும் இரண்டு வித்யார்த்திகள் நாவல்பாக்கத்திலிருந்து வந்திருந்தார்கள். உடல், பொருள், ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்து ஐந்து வித்யார்த்திகளுக்கு அன்னமளித்துப் போஷித்துத் தம்முடனேயே வைத்து அத்யாபனம் செய்வித்து வரும் முல்லைவாசல் ராஜகோபால கனபாடிகளும், வித்யார்த்திகளும் திருநெல்வேலி ஜில்லா கோபால சமுத்திரத்திலிருந்து வந்தார்கள்.

தவிரவும் இந்தியாவின் பற்பல பகுதிகளிலிருந்தும் — ஆந்திரம், கர்நாடகம், கேரளம், மகாராஷ்டிரம், ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம் ஆகியவற்றிலிருந்து — வேத விற்பன்னர்களும் வித்யார்த்திகளும் வந்து குழுமியிருந்தார்கள். ஆதியில் வேதத்துக்கு 1131 சாகைகள் இருந்து தற்போது பத்து சாகைகள்தான் எஞ்சி நிற்கின்றன. இவையும் மறைந்து விடாமல் பாதுகாக்க வேண்டியதே நம் கடமை. அதற்காகவே காமகோடி பெரியவாளின் ஆக்ஞைப்படி வேத சம்ரக்ஷண சபையினர் நாட்டின் மூலை முடுக்கெல்லாம் தேடித் தற்போது வழக்கிலுள்ள எல்லா சாகைகளிலும் சீடர்களைப் பயிலுவித்து வருகிறார்கள். இவர்கள் யாவரையும் ஒருங்கு கூட்டுவதே சம்மேளனத்தின் முக்கியமான நோக்கம். சிம்மங்களைப் போல் தேசத்தின் பல பகுதிகளிலிருந்து வந்திருந்த வேத வித்தகர்களும், இளம் சிம்மங்கள் போல் வேத சாகைகளை ஓதும் அவர்களது சீடர்களுமாகச் சேர்ந்து கம்பீர நாதத்துடன் வேத மந்திரங்களைக் கோஷித்து வேத மரபின் எதிர்காலத்துக்கு அழுத்தம் திருத்தமாகக் கட்டியம் கூறினர்.

பத்து சாகைகளின் பிரகாரம் ஹோமங்களும் பாராயணங்களுடன் நியமத்துடன் நடந்தன. வேத விதிப்படி கணபதி, துர்க்கை, லட்சுமி, நவக்கிரக, புருஷ சூக்த ஹோமங்கள் நடைபெற்றன.

பிற்பகல் கூட்டங்களில் வாதங்களும், சர்ச்சைகளும் இடம் பெற்றன. அப்போது வெளியான கருத்துக்களில் தமிழ் நாட்டை மிகவும் கவரக்கூடிய ஓர் உண்மை: ஜைமினி சாகையில் ழ என்ற சப்தம் இருப்பதாக நிலைநாட்டப்பட்டது.

எழுதாக்கிளவியாக வந்துள்ள வேதத்தின் அக்ஷரம் பிற்காலங்களில் இம்மியும் மாறுபடலாகாது என்பதற்காக மந்திர அக்ஷரங்களை விதவிதமாகப் பின்னி வைத்துள்ளனர் மகா மதியும், காருண்யமும் மிக்க முனிவர்கள். பதம், க்ரமம், ஜடை, கனம், ரதை, துவஜம், ரேகா, மாலா ஆகிய அக்ஷரப் பின்னல் முறைகளால் ஒவ்வோர் அக்ஷரத்தையும் ஐயம் திரிபின்றி நிர்த்தாரணம் செய்ய முடியும். நாதப் பிரபஞ்சத்தின் பரம கம்பீர ரூபங்களாகிய இந்தப் பின்னல்களை மாநாடு நடைபெற்ற இரவுகளில் செவிமடுக்க முடிந்தது.

மறைகளைப் பகுத்துத் தந்த மகரிஷி வேத வியாஸரின் தோன்றாத் துணையுடன் நடைபெற்ற சதஸில் வட இந்திய வேதப் புலவரேறுகளுடன் சிருங்கிரி மடம் காசி கனபாடிகள், காமகோடி பீடம் ராமசுவாமி சர்மா, சம்ஸ்கிருதக் கல்லூரித் தலைவர் ஸ்ரீ பாலசுப்ரமணிய சாஸ்திரிகள், திருப்பதி வேத பாடசாலைத் தலைவர் ஸ்ரீகிருஷ்ண சுவாமி ஐயங்கார், பாரதிய வித்யாபவனப் பண்டிதர் ஸ்ரீ வேங்கடேச தீக்ஷிதர், திருவானைக்காவல் பாலகிருஷ்ண சாஸ்திரிகள் ஆகியோர் முக்கியமான பங்கு பற்றினர். 28-ந் தேதி மைசூர் மகாராஜா அவர்கள் விழாவில் கலந்து கொண்டு வேதத்துக்கு வந்தனம் தெரிவித்தார். விழாவில் கலந்து கொண்ட வேதவித்துக்களுக்கு சம்மானமும், கல் வைத்தவாரம் பரீக்ஷையில் தேறியோருக்குப் பரிசுகளும் வழங்கப்பட்டன.

இம்மாதிரி சதஸ் இதுவரை நடந்ததில்லை; இனி நடக்கப்போவதும் அசாத்தியம் என்றே சொல்லலாம். வரவேற்பு, தலைமை வகிப்பு, பிரசங்கம், வந்தனோபசாரம் என்னும் லௌகிக வாசனையே இல்லாமல் ஏககாலத்தில் பாரத தேசம் முழுவதிலிருந்தும் எல்லா சாகைகளையும் சேர்ந்த வேத விற்பன்னர்கள், ஏகாக்ரமாகச் செய்த பாராயணத்தையும், வித்தியார்த்திகளின் வேதமோதுதலையும் கேட்டுப் பத்தாயிரம் மக்கள் ஐந்து நாட்கள் பூரித்து மனம் குளிர்ந்தனர். பத்து நாட்களுக்கு முன் நாடு இருந்த நிலையில் இந்த விழா நடக்குமா என்கிற பயமும் இருந்தது. ஆனால் ஆசாரிய சுவாமிகளின் அருள் இருப்பின் எதுதான் நடக்காது?


இன்பக் கனவே எழிலுருவே...
ஏற்றம் மிகுந்த ஓவியமே
உங்கள் இன்பக் கனவுகள் நனவாக
கவர்ச்சியான சக்தி சில்க் ஆடைகளை
அணிந்து எழிலோவிய மாகத்
திகழுங்கள். நயமான துல்லிய நெசவு.
வண்ண வண்ண மாதிரிகள். சக்தி
சில்க்குகள் உங்கள் மனம் கவரும்
மாதிரிகளில் தயாரிக்கப்படுகின்றன.
உங்கள் வனப்பின் பூரணப் பொலிவை
எடுத்துக்காட்ட சக்தி சில்க் ஆடைகளை
அணியுங்கள்.
Shakti Silks
போதார் தயாரிப்புகள்





ஏலகிரி ஸ்ரீ பாலசுப்பிரமணியர் ஆலயத்தின் மகா கும்பாபிஷேகம் முன்பு ஜனவரியில் நடந்தது நினைவிருக்கும். சமீபத்தில் மண்டலாபிஷேகமும் விமரிசையாக நடைபெற்றது. திருமுருக கிருபானந்தவாரியார் இவ்வைபவத்தில் கலந்து கொண்டார். 2. கங்குவார் சத்திரத்துக்கு அருகிலுள்ள சாந்த வேலூரில் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் சிவராத்திரி பூஜை நிகழ்த்த எழுந்தருளுகிறார். 3. கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்க வெள்ளி விழா தொடக்க நாள் விழாவில் ஸ்ரீமதி சிவானந்த விஜயலக்ஷ்மி சிறப்புரை நிகழ்த்துகிறார். 4. கலாக்ஷேத்திராவில் நாட்டியாசார்ய ஸ்ரீ டி. கே. சந்து பணிக்கரின் தொண்ணூற்றோராவது பிறந்த தினத்தை மார்ச் 14ந் தேதி விமரிசையாகக் கொண்டாடி அவரைக் கௌரவித்தார்கள்.







5. வண்ண முடியமைவுகள் படத்தைத் தாசப்பிரகாஷ் ஹோட்டலில் மார்ச் 5-ந் தேதி டாக்டர் அ. சிதம்பரநாதன் அவர்கள்வெளியிட்டார்.



6. நூலகத் துறையில் நிபுணர்களுக்கு அமெரிக்க சர்க்கார் விருந்தளித்துக் கௌரவித்தது. இந்த வைபவத்தில் சென்னை திரு ஏ. திருமலை முத்துசுவாமி, கல்வி, கலைத் தொடர்பு உதவிக் காரியதரிசி ஹாரி வி. மெக் பியர்ஸனுடன் உரையாடுகிறார்.

7. இந்திய ராணுவத்தின் பதினாறாவது 'கேவல்ரி'ப் படையின் 188வது ஆண்டு விழாவில் ஜெனரல் சௌத்ரி இளம் ராணுவ அதிகாரிகளோடு அளவளாவுகிறார். இந்தப் படையினரே இருபது வருஷங்களுக்கு முன் பர்மாவில் மெக்டிலா விமான தளத்தை அவரது தலைமையில் கைப்பற்றினர் என்பது குறிப்பிடத் தக்கது.



## 21. வில்வலன்-வாதாவி

ஆட்சிபீடத்தில் ஏறியதும் சூரபன்மனின் அதிகார வெறி தலைக்கேறியது. நன்மக்கள் சிம்மாதனம் ஏறினாலே அவர்களிடமுள்ள அதிகார பலத்தால் குணம் குன்றிப் போவார்கள். சூரபன்மாசுரனுக்குக் கேட்பானேன்?

உலகையெல்லாம் பரிபாலிக்கும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியிடமும் தன் அதிகார சக்தியைக் காட்டினான் சூரன்.

திருமாலிடம் சூரன் கூறுவான்: "நீ என் தந்தையாராகிய காசிப முனிவருக்குப் பாட்டன். ஆதலால் உன்னை அழைக்கும்பொழுது விரைந்து வர வேண்டும்" என்று கட்டளையிட்டான்.

பிரமதேவரை நோக்கி, "உன் புத்திரர்களுடன் எப்போதும் இங்கு வந்து பஞ்சாங்கம் சொல்லிப் போக வேண்டும்" என்றான்.

கதிரவனை நோக்கி, "நீ நம்முடைய நகர் மதிலின் மேல் உக்கிரமான வெப்பத்துடன் செல்லுதல் கூடாது. எந்நாளும் இங்கு இளங்கதிராய்த் திகழ வேண்டும்" என்று பணித்தான்.

சந்திரனை அழைத்து "நீ இனி தேய்தல் வளர்தலின்றி, பூரண கலையோடு நம் நகரில் சஞ்சரிக்க வேண்டும்" என்று கட்டளையிட்டான்.

அக்கினியை நோக்கி, "நம் ஊரில் உள்ளவர்கள் யார் நினைத்தாலும் அவரிடத்து வந்து அவர்கள் இடுகின்ற பணியைச் செய்ய வேண்டும். உன்னை என் மக்களில் யார் தீண்டினாலும் செந்தாமரை மலர் போலக் குளிர வேண்டும்" என்றான்.



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

இயமனை அழைத்து, "அசுரர்கள், நம்முடைய யானை, குதிரை முதலிய விலங்குகள் ஆகியவற்றின் உயிரைப் பறிக்க வேண்டும் என்று நீ கனவிலும் கருதக் கூடாது" என்று கூறினான்.

வாயுவை அழைத்து, "என் நகரத்தில் உள்ள புழுதியை நீக்கிச் சுத்தம் செய்வது உன் தொழில்" என்றான்.

வருணனை நோக்கி, "வாயு சுத்தம் செய்த இடங்களில் எல்லாம் பன்னீர் தெளித்துப் பச்சைக் கர்ப்பூரம் சந்தனம் கஸ்தூரி முதலியவற்றைத் தெளிக்க வேண்டும்" என்று கட்டளையிட்டான்.

"தேவர்களே! நாம் உத்தரவிடும் போது நீவிர் மீன் பிடித்துத் தரவேண்டும்" என்று கட்டளை பிறப்பித்தான். தேவர்கள் அனைவரும் அஞ்சி நடுங்கிச் சூரன் கட்டளையைத் தவறாமல் நிறைவேற்றி வைப்பதாகக் கூறினார்கள்.

ஆண்டவனின் ஆட்சிக்கும் அசுரன் ஆட்சிக்கும் உள்ள வேற்றுமையைப் பாருங்கள்! ஆண்டவனின் ஆட்சியில் அக்கினியும், வாயுவும், வருணனும் தங்களது இயற்கைப் போக்குப்படி நடப்பார்கள். அந்தப் போக்கை மாற்ற ஆண்டவனுக்குச் சக்தி இருப்பினும் அவர் அவ்வாறு செய்வதில்லை. அசுரனோ தன்னையும் தன் சுற்றத்தினரையும் பொறுத்த மட்டில் இயற்கைச் சக்திகளும் செயற்கையாகத் தொழில்பட வேண்டுமென்று ஆக்ஞை விட்டான்.

சூரபன்மன் தேவதச்சனுடைய மகளாகிய பதும கோமளையைத் திருமணம் செய்து கொள்ள விரும்பினான். விதிப்படி திருமணம் செய்து வைத்தார் சுக்கிராச்சாரியார். தேவர், அசுரர், கந்தருவர், சித்தர், கின்னரர், இயக்கர், நாகர், கிம்புருடர் முதலிய பல சாதிப் பெண்களைக் காமக் கிழத்தியர்களாகக் கொண்டு சூரன் இன்புற்றான். சிங்கமுகாசுரனுக்கு இயமனுடைய மகளாகிய விபுதையையும், தாரகாசுரனுக்கு நிருதியின் மகளாகிய சவுரியையும் திருமணம் செய்து வைத்து அவர்களை அவர்களது நகரங்களுக்கு அனுப்பி வைத்தான். தன் இளவல்களுக்கு இரண்டு கோடி வெள்ளம் சேனைகளையும் அளித்தான்.

விண்ணுலகத்திலும், மண்ணுலகத்திலும், ஏழ் பிலங்களிலும், எண்டிசைகளிலும் அசுர சேனைகள் சூரபன்மனுடைய கட்டளைப்படி கொடுங்கோல் செய்து வந்தார்கள். தான் வசித்த வீரமகேந்திரபுரத்தில் இலக்கம் வெள்ளம் அசுரர்களை மாளிகைகள் தோறும் இருத்தினான் சூரன். யானை, குதிரை, யாளி, கரடி, புலி, பன்றி, சிங்கம், மான் ஆகியவற்றின் முகங்களைக் கொண்ட எட்டு அசுரத் தலைவர்களை வீரமகேந்திர புரத்தின் எட்டுத் திக்குகளிலும் உள்ள நகரங்களுக்கு அனுப்பி வைத்தான். தேவர்களும் முனிவர்களும் சூரபன்மனு



டைய வீர மகேந்திரபுரத்திலும், சிங்க முகாசுரனுடைய ஆசுர நகரத்திலும் தாரகாசுரனுடைய மாயமாபுரியிலும் சென்று அவர்கள் இட்ட பணியைச் செய்து வந்தார்கள்.

தேவர்கள் தமது விதியை நொந்து கொண்டு கற்பகத் தருவின் கீழ் வாழும் வாழ்க்கை நீங்கி வலைஞர்கள் போல் மீன் பிடிக்க வேண்டிய காலம் வந்துவிட்டதே என்று வருந்தி, சூரபன்மனை வணங்கி நாள்தோறும் மீன்களைப் பிடித்து வந்து அசுரர்களுக்குக் கொடுத்தார்கள். மீன் கூடைகளைச் சுமந்து வந்த தேவர் களை நோக்கிய அசுரர்கள் அவர்களை ஏளனம் செய்து துன்புறுத்தி மகிழ் வார்கள்.

சூரபன்மனுக்குப் பதுமகோமளை யிடத்துப் புதல்வன் ஒருவன் பிறந்தான். அம் மகவைக் கண்டு மகிழ்ந்த சூர பன்மன் விழாக் கொண்டாடினான். பொன் மழை பொழிந்தான். தன் சுற்றத்தார்க்கெல்லாம் செல்வங்களை வாரி வாரி வழங்கி மகனைத் தொட்டி லில் இட்டான். அரம்பையர்களும் அசுரப் பெண்களும் அக்குழந்தையை ஆசீர்வதித்தனர்.

வளர்பிறை போல் வளர்ந்து வந்த அக்குழந்தை ஒரு நாள் தொட்டிலில் தூங்கும்போது திறந்திருந்த சாளரத் தின் வழியாக சூரியகிரணம் தாக்கியது. உடனே அக்குழந்தை கோபத்துடன் ஆகாயத்தில் பாய்ந்து சூரியனைக் கையால் பிடித்து இழுத்து வந்து தொட்டிலின் காலில் கட்டிவிட்டு முன் போல் துயில் கொண்டது. விண்ணில் விரிசுடரோன் இல்லாமையால் விண்ண வர்கள் அஞ்சி வருந்தினார்கள். இந்திரன் முதலிய தேவர்கள் சூரபன்மனிடம் வந்து கதிரவனைச் சிறை விடுக்கும்படி வேண் டிக்கொண்டனர். சூரபன்மன் தன் மக னுடைய வீரச் செயலை நினைத்து மகிழ்ந்தான்.

''என் மகன் சூரியனைச் சிறை செய் தது எனக்குத் தெரியாது. என் மகன் சிறையிடும்படியாக சூரியன் என்ன குற்றம் செய்தான்?'' என்று கேட் டான். ''கதிரவனின் கிரணம் உம் மகனுடைய முகத்தைத் தீண்டியது. அதனால் சூரியனைப் பிடித்துச் சிறையி விட்டு விட்டான்'' என்று பிரமதேவர் கூறினார். ''நீங்கள் என் மகனிடம் இன்சொல்லால் வேண்டிக் கதிரவனைச் சிறை விடுத்து இங்கே கொண்டு வாருங்கள்'' என்றான் சூரபன்மன்.

அரம்பையர்கள் பாடியாட்டுகின்ற தொட்டிலில் கிடந்தான் சூரபன்மனின் மகன். பிரமதேவரும் ஏனைய தேவர் களும் அங்கு வந்து குழந்தைக்கு நல் லாசிகள் பல கூறினர்.

''உங்களுக்கு என்ன வேண்டும்? சொல்லுங்கள்'' என்று அக் குழந்தை பிரமதேவரிடம் கேட்டது.

''சூரியனைச் சிறையிலிருந்து விடு விக்க வேண்டும்'' என்று பிரமதேவர் வேண்டிக் கொண்டார்.

''உன்னுடைய அஸ்திரத்தை எனக் குத் தந்தால் சூரியனைச் சிறை விடுப் பேன்'' என்று குழந்தை கூறியது. அதற்கு இணங்கிப் பிரமதேவர் தமது மோகப் படையைக் குழந்தைக்குக் கொடுத்தார். அதனைப் பெற்ற அக் குழந்தை சூரியனைக் கட்டவிழ்த்து விட்டது.

கந்தவேளும் குழந்தையா யிருந்த போது பிரமனைச் சிறை புரிந்ததுண்டு. ஆனால் அந்தக் காதை உலக க்ஷேமமாகிய தத்துவ உபதேசத்தில் முடிந்தது. அசுரர் குல இளவரசன் சூரியனைச் சிறை வைத்ததோ அவனது சுயலாபத்தில் முடிந்தது. அமுதனுக்கும் அசுரனுக்கும் உள்ள வேற்றுமையைப் பாருங்கள்.

சூரியனும் பிரமதேவரும் குழந்தை யிடம் விடைபெற்றுக் கொண்டு சூரபன்மனிடம் சென்றார்கள். அவனி டம் நிகழ்ந்தவற்றை யெல்லாம் சொன் னார்கள். பானுவாகிய சூரியனிடம் தன் மகவு கோபித்த காரணம் பற் றியே சூரன் தன் குழந்தைக்குப் பானு கோபன் என்று அந்த நாளில் பெயர் சூட்டினான்.

பானுகோபனுக்குப் பின் பதும கோமளையிடம் சூரபன்மனுக்கு அக்கினி முகன், இரண்யன், வச்சிரவாகு என்ற மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள். ஏனைய மனைவியரும் ஏககாலத்தில் மூவா யிரம் புதல்வர்களைப் பெற்றார்கள்.

சிங்கமுகாசுரன் தனது பட்டத்துத் தேவியாகிய விபுதையிடம் அதிசூரன் என்னும் மகனையும், மற்ற மனைவி யரிடம் நூறு புத்திரர்களையும் பெற் றான். தனது பட்டத்துத் தேவியாகிய சவுரியிடம் தாரகன் அசுரேந்திரன் என்னும் மகனைப் பெற்றான். அப் புதல்வன் சகல நற்குணங்களுக்கும் உறைவிடமாகத் திகழ்ந்தான். அழகு மிக்க அவன் சகல கலைகளிலும் வல்லவ னாக வளர்ந்தான். அவன் தீமைகள் புரிய மாட்டான். பாவ காரியங்களில் ஈடுபட மாட்டான்; தருமமல்லாத வற்றை நினைக்கவும் மாட்டான். கள்ளிச் செடி அகிலைத் தந்தது போல் தாரகன் அசுரேந்திரனைப் பெற்றான்.




# கால்கேட் பேபி பவுடர்

மிக நேர்த்தியானது

...பெரிய டப்பாகூட

அவ்வளவு அதிக இதமளிப்பது.
அவ்வளவு அதிக மணமுள்ளது.
குழந்தையின் இளஞ் சருமத்திற்கு
மிகவும் உகந்தது



அதிகப் பவுடர்
அதிகச் சிக்கனம்





KALPANA

# KALINGA POLES

**STEP DRAWN STEEL TUBULAR POLES FOR POWER TRANSMISSION, STREET LIGHTING, ETC.**

**KALINGA TUBES LTD.** 33, Chittaranjan Avenue, Calcutta-12.
Works—Choudwar, (Orissa)

சூரபன்மனின் தங்கை அசமுகி திருமணம் செய்துகொள்ளாதவள். கற்பு நெறியைப் பின்பற்றாமல் விரும்பிய ஆடவனுடனெல்லாம் சேர்ந்து வாழ்ந்தாள். பாவமே வடிவாக வந்த அவள் தருமத்தைக் கனவிலும் நினைக்கவில்லை. அவள் தேவர்களின் மனைவியரைத் தன் தமையன்மார்களுக்கு மனைவியராக்கி வைப்பவள்; முனிவர்கள் செய்யும் வேள்விகளைக் கெடுப்பவள்; அசுரர் குலத்தை அழிக்க அநீதி புரிந்து உலவுவாள்; அழகிற் சிறந்த ஆடவரை வலியப் புணர்வாள்.

ஒருநாள் அசமுகி துருவாச முனிவருடைய ஆசிரமத்துக்குச் சென்று ''உங்களுடன் கூடி மக்களைப் பெற வந்திருக்கிறேன்'' என்று கூறினாள்.

துருவாச முனிவர், ''பெண்ணே! உன்னுடன் நான் கூடினால் என் தவம் வீணாகும்; நீ இங்கு நிற்பதே எனக்குப் பழியைத் தரும்'' என்று கூறினார்.

''முனிவரே! என்னிடமிருந்து தப்பி ஓடிவிடலாம் என்று எண்ண வேண்டாம். நான் உங்களைக் கூடாது போக மாட்டேன்!'' என்று கூறி அசமுகி அவரைப் பலாத்காரம் செய்தாள். அப்பொழுது அவளிடத்தில் வலிமை மிக்க வில்வலன், வாதாவி என்ற புதல்வர்கள் பிறந்தார்கள்.

அக் குழந்தைகளை அசமுகி அன்புடன் தழுவி உச்சி மோந்தாள். அப் புதல்வர்கள் இருவரும் துருவாச முனிவரை வணங்கினார்கள். அவர் ''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார். ''தந்தையே! உங்கள் தவம் முழுவதையும் எங்களுக்குத் தந்தருள வேண்டும்'' என்று கேட்டனர். ''மைந்தர்களே! நான் அரிதிற் செய்த தவத்தைத் தரமாட்டேன். வேறு பொருளைக் கேளுங்கள்'' என்று துருவாசர் கூறினார். அப் புதல்வர்கள் கோபத்துடன் தங்கள் தந்தையாகிய துருவாச முனிவரையே கொல்ல விரைந்து எழுந்தார்கள். அவர்கள் செயலைக் கண்டு சினமடைந்த துருவாச முனிவர் ''நீங்கள் நாடோறும் முனிவர்களுக்குத் துன்பம் செய்து வாழ்ந்து அகத்திய முனிவரால் அழியக் கடவது'' என்று சாபம் கொடுத்து விட்டு மறைந்து போனார்.

வில்வலன், வாதாவி இருவரும் தாயாகிய அசமுகியிடம் சென்றனர். முனிவர்களைத் துன்புறுத்திக் கொல்லும்படி அவர்களுக்கு அசமுகி உபதேசம் செய்தாள். அங்கிருந்து வேறு வனம் சென்ற வில்வலனும் வாதாவியும் அக்கினியில் நின்று பிரமதேவரைக் குறித்து அளவற்ற காலம் கடும் தவம் செய்தனர். பிரமதேவர் தரிசனம் தராததால் மனம் வருந்திய வில்வலன் தன் தம்பியாகிய வாதாவியைக் கொன்று அவனது இரத்தத்தையும், தசையையும் நெய்யும் அவியுமாக நெருப்பில் சொரிந்து யாகம் செய்தான். பிரம்மதேவர் பிரசன்னமானார். வில்வலன் பிரமதேவரைப் பணிந்து துதித்து, ''என் தம்பி குறையில்லாத வடிவத்துடன் எழுந்து வர வேண்டும்'' என்று கேட்டான். ''வாதாவி எழுக'' என்று பிரமதேவர் கூறியதும் அவன் எழுந்து வந்தான்.

அதனைக் கண்டு அதிசயித்த வில்வலன் மனத்தில் சூதான எண்ணத்தோடு ஒரு வரம் கேட்டான். ''இப்போது தாங்கள் கூறியவுடன் இறந்த வாதாவி மீண்டும் வந்தானன்றோ? இதே போல ஆட்டின் உருவம் கொண்ட என் தம்பி உடல் வெட்டுப்பட்டு இறக்க, அதன் பின் நான் 'தம்பியே எழுக' என்று அழைத்ததும் அவன் உயிர் பெற்று எழுந்து வரத் தாங்கள் வரம் தரவேண்டும்'' என்று பிரமரைக் கேட்டுக் கொண்டான். பிரமதேவரும் வரத்தை அருளினார்.

பிறகு வில்வலன், வாதாவி இருவரும் சூரபன்மன் முன் சென்று தங்கள் வரலாற்றைச் சொல்லி அவனை மகிழ்வித்தனர். சூரபன்மன் அவ்விரு மருமக்களையும் தழுவி மகிழ்ந்து தன்னுடன் அவர்களைச் சில காலம் வைத்துக்கொண்டான்.

பிறகு அவர்கள் குடக நாட்டில் வளமை மிக்க ஒரு காட்டில் ஆசிரமத்தை நிறுவி அதில் முனிவர் போல் வேஷமிட்டு வசித்து வந்தார்கள். அவ்வழியே வரும் முனிவர்களைக் கொல்ல வேண்டும் என்று எண்ணிய வில்வலன், முனிவர்கள் வந்தால் அவர்களைப் பணிந்து உபசாரத்துடன் அழைத்து வருவான். ''உணவு அருந்த வாருங்கள்'' என்று கூறி ஆட்டுக் கடா வடிவத்தில் இருக்கும் வாதாவியைக் கொன்று கறி சமைத்து அவர்களுக்கு விருந்தளிப்பான். முனிவர்கள் விருந்துண்ட பின், ''தம்பி எழுக'' என்று கூவுவான். உடனே பிரமதேவர் தந்த வரத்தின் சக்தியால் வாதாவி, தன்னை உண்ட முனிவருடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வருவான். இந்தச் சூழ்ச்சியில் சிக்கி இறக்கின்ற முனிவர்களின் தசைகளை இருவரும் உண்டு களிப்பார்கள். இவ்வாறே வாதாவியும், வில்வலனும் நாடோறும் முனிவர்களைச் சூழ்ச்சியால் கொன்று வந்தனர்.

**(தொடரும்)**

## பூஜைக்கு வந்த மலர்

சென்னை தியேட்டர்கள் பலவற்றில் 'நைட் கிளப்புகள்', என்ற இரவுக் கேளிக்கைகள் பற்றிய ஆங்கிலப்படங்கள் வந்து பெண்ணின் பெருமையைக் காற்றில் பறக்கவிட்டுக்கொண்டிருக்கும் போது, பாரதப் பெண்ணின் பண்பாட்டை விளக்க ஒரு மூலையிலாவது 'பூஜைக்கு வந்த மலர்' திரைப் படம் ஓடுவது சாந்தியளிப்பதாக இருக்கிறது.

கல்லூரி மாணவர்களான ரவியும், சுரேஷும் இணை பிரியாத நண்பர்கள். இந்த நட்பின் விளைவாகச் சுரேஷ் தன் நண்பன் ரவிக்கேற்பட்ட களங்கத்தையும் தானே ஏற்றுக் கல்லூரியை விட்டு அகலுகிறான். ஆனால் இரு நண்பர்களும் விதியின் விளையாட்டினால் ஒரே இன்ஜினியரிங் கம்பெனியில் வேலைக்கு அமர்கிறார்கள். அங்கும் இவர்கள் நட்புக்குப் பெரும் சோதனை ஏற்படுகிறது. கம்பெனியில் யாரோ செய்த திருட்டுக் குற்றத்துக்குப் பழி சுரேஷின் மேல் விழுகிறது. இந்தத் தருணத்தில் சுரேஷுக்குக் கடமைப்பட்ட ரவி தன் காதலிக்காக நட்பைக் காற்றில் பறக்க விடுகிறான். இதைக் கண்ணுற்ற சுரேஷ் ரவியின் மீது அடங்காக் கோபம் கொள்கிறான். அந்தச் சினத்தைத் தீர்த்துக் கொள்வது எப்படி? ரவியின் தங்கை சித்ராவுக்கும் சுரேஷுக்கும் காதல் முடிச்சுப் போட்டால்தானே? நினைத்தபடியே நடக்கிறது. ஆனால் சித்ராவின் கழுத்தில் மூன்று முடிச்சுப் போடுவதற்குள்தான் எத்தனை இடைஞ்சல்? கடைசியில் வழக்கம்போல் இன்ஜினியரிங் கம்பெனியில் அவர்கள் நட்புக்கு உலை வைத்த குற்றவாளி யாரென்று புலப்பட, 'பூஜைக்கு வந்த மல'ரான சித்ராவைச் சுரேஷ் ஏற்றுக் கொள்கிறான். பிரிந்த நண்பர்கள் ஒன்று சேரப் பாடுபடுபவர் மிஸ்டர் ஞாபகமறதி! ஆனால் இவர்களை ஒன்று சேர்த்து வைப்பதில் மட்டும் அவர் ஞாபக சக்தி அபாரம்!

மிஸ்டர் ஞாபகமறதியாக வரும் நாகேஷ் 'ரெஞ்சின்' ஞாபகமறதி ஹாஸ்யங்களை யெல்லாம் ஞாபகமாக வெடிக்கச் செய்து ரசிகர்களை நகைக்க வைக்கிறார்!

முத்துராமன் — மணிமாலா இளம் காதல் ஜோடிகளின் வழக்கமான ஆட்டபாட்டங்களையே காண்கிறோம். ஏழை வேஷம் போடும் சித்ரா (சாவித்திரி)யின் வேஷத்தை சுரேஷ் (கணேசன்) அம்பலப்படுத்தும் காட்சி நன்றாயிருக்கிறது.

இந்தப் படத்தில் சித்ராவின் தந்தை சிவநேசனாக வரும் சகஸ்ரநாமத்தின் நடிப்பு நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது.

பல காட்டுச் செடிகளுக்கு மத்தியில் பூஜைக்கு உகந்த மலர் பூத்திருக்கிறது!



## மர்மக் கை

மர்மக் கதை இரண்டு விதம். ஒன்றில், ஆரம்பத்திலேயே குற்றவாளி யார் என்பதைத் தெளிவாகக் காட்டி விடுவார்கள். அப்புறம் அவனைத் தேடிப் பிடிப்பதில் எடுத்துக் கொள்ளும் சிரமத்தைக் காட்டுவார்கள். பல வேஷங்கள் தரித்து மறைந்து திரிந்து அவன் பிடிபடுவான். மற்றொன்றில் குற்றவாளி யார் என்று தெரியாது. அவனைக் கண்டு பிடிக்க நடைபெறும் முயற்சி பல சிக்கல்களைக் கொண்டு வரும். குற்றவாளி இன்னார் என்று இலேசில் கூற முடியாது. கதை முடியும் பொழுதுதான் குற்றவாளியைக் காண்போம்.

இந்த இரண்டாவது வகையைப் பின்பற்றி நீலா புரொடக்ஷன்ஸார் 'மர்மக்கை' என்னும் மர்மக் கதையைப் படமாக்கியிருக்கிறார்கள். ஆனால் வெற்றி காணவில்லை. காரணம் படம் பார்ப்பவர்கள் மர்மக்கை இன்னாருடையதாகத்தான் இருக்கவேண்டும் என்று முன்கூட்டியே ஊகித்து வெற்றி கண்டு விட்டார்கள்.

'யாருக்கு வெற்றி கிடைத்தால் என்ன? ரசிகர்களின் வெற்றி நமது வெற்றிதானே?' என்று நினைக்கும் அளவுக்குக் கதையில் கேளிக்கைகளைப் புகுத்தியுள்ள படத் தயாரிப்பாளர்கள் பல இடங்களில் கேலிக் கூத்தாகச் செய்திருக்கிறார்கள். படத்தில் வரும் பாத்திரங்களின் பேச்சும் வாயசைவும் 'டப்' பண்ணிய படம் என்பதை எடுத்துக் கூறினாலும் படம் 'டப்பா' ஆகாமலிருக்க முயன்றிருக்கிறார்கள்.

# ஜீவகீதம்





ஜெகசிற்பியன்

அத்தியாயம் 13

## நச்சியின் காதலி

சபேசனுக்கு ஒரே வியப்பும் திகைப்புமாகிவிட்டது. அத்துடன் ஒரு சிக்கலான கேள்வியும் அவனுள் எழுந்தது: 'இவனே இப்போது பார்ப்பதா? அல்லது நகர மன்ற அலுவலகத்துக்குப் போய் அந்தப் பெண்ணைச் சந்திப்பதா?'

தயங்கி நின்ற அவன் நேற்றையச் சம்பவத்தை நினைத்துக் கொண்டான்.

'அந்த பஸ் நிலேயத்தில் நச்சி இந்தப் பெண்ணை முறைத்துப் பார்த்ததோடு நில்லாமல், பிறகு அவள் போய்விட்டாளா என்றும் என்னிடம் கேட்டானே? அவளும் இவனேக் கண்டு அஞ்சியவள் போல் நடந்து கொண்டாளே! ஒருகால் இவ்விருவரும் ஏற்கனவே அறிமுகமானவர்களாகவோ, அல்லது ஏதேனும் ஒருவகையில் உறவு கொண்டவர்களாகவோ இருப்பார்களோ? அப்படியிருந்து, அவளே நான் பார்க்கப் போய், அதை இவன் தவருக எண்ணிவிட்டால் என்ன செய்வது? நாலேந்து நாட்களாகத் தன் வீட்டு நினேவே இல்லாமல் ஊரைச் சுற்றிக் கொண்டிருந்தவனுக்கு இவளேப் பார்த்ததும் திடீரென்று அந்த ஞாபகம் வரவும், அங்கே ஏதோ ஒரு கால்கட்டு இருப்பதாகச் சொல்லவும் காரணம் என்ன?'

குழம்பி நின்ற சபேசன், தான் முதலில் சம்பாதித்து இழந்த பணத்தை மீண்டும் பெறக் கிடைத்த வாய்ப்புக்கு இப்படி ஒரு சோதனே ஏற்பட்டுவிட்டதே! என்ற துயரத்தில் ஆழ்ந்தான்.

''இன்னு, பிரதர்! நீ இங்கேயா வந்திருக்கிறே? இப்ப உன்னேப் பார்க்கத்தானே ஐலண்ட் மைதானத்துக்குப் போயிக்கிட்டிருக்கிறேன்!'' என்று கலகலப்பான குரலில் கேட்டுக்கொண்டே வண்டியைத் தோல் மண்டியொன்றின் அருகில் நிறுத்திவிட்டுச் சபேசனே நோக்கி வந்தான்.



சபேசன் அவனைத் திருதிருவெனப் பார்த்து விழித்துக்கொண்டு நின்றிருந்தான். அவனுடைய எண்ணமெல்லாம் அந்தப் பெண்ணைப் போய்ப் பார்க்க வேண்டும் என்பதிலேயே சுழன்றுகொண்டிருந்தது. அவனுக்காகக் காத்திருக்கும் அவள், இன்று அவன் வரவில்லை என்று எண்ணித் திரும்பிப் போய்விட்டால், அப்புறம் கடனைக் கொடுத்த ஒரு ரூபாயை அவளிடமிருந்து பெற முடியாமல் போய்விடுமே என்ற கவலை அவனுக்கு!

''காலம்பற வந்து பார்க்கிறேன்னு சொல்லிவிட்டுப் போனவன் வரலேயேன்னு தம்பிக்கு என்மேல் கோவமா?'' என்று கேட்டுக்கொண்டே வந்த நச்சி, அவன் முகத்தை ஒரு கணம் கூர்ந்து பார்த்துவிட்டு மெல்லச் சிரித்தவாறு, ''ஓ.... இது இன்னா, இன்னைக்குப் புது வேலைன்னு யோசிக்கிறயா?...... ஆமாம், தம்பி! நம்ம தோஸ்து ஒருத்தன் இருக்கிறான். பேரு பாவாடை. அவனுக்கு இந்தக் கிஸ்ணயில் விக்கிற வேலை. இன்னைக்கென்னவோ அவன் கையில் கொஞ்சம் காசு இருக்கிறாப் போலே இருக்கு. பயலுக்குத் தெருமேல் போவப் புடிக்கலே. வண்டியை என் கிட்டே கொடுத்திட்டு ஜாலியா சினிமாவுக்குக் கிளம்பிட்டான். இல்லேன்னா இந்த வியாபாரம் பண்ணணும்னால் முடியாது. இதுக்குக் கொஞ்சம் முன் பணம் வேணும்; ஆள் ஜாமீனும் கொடுக்கணும். அதுக்கெல்லாம் நான் எங்கே போவேன்? இன்னைய ஒரு பொழுதுக்கு வழி பொறந்தால் போதும். நாளையப் பொழுதை நாளைக்குப் பார்த்துக்கலாம். இப்பத்தான் ஊட்டுக்கு ஊடு ஸ்டவ் ஆயிப் போச்சே! பொம்மனாட்டிங்களுக்கு இப்ப ஸ்டவ்வுலே சோறு ஆக்கிறது ஒரு பாஷன் இல்லையா? அதனாலே நாலு தெருவைச் சுத்தினாலும் அசலைத் திருப்பிக் கொடுக்கிறது போக, ஐஞ்சோ ஆறோ கிடைச்சுடும். ஆனால் முந்தியெல்லாம் கிஸ்ணயிலே, காலன்-புட்டிக் கணக்கிலே வித்துத்தான் எனக்குப் பழக்கம்; இப்ப லிட்டர் கணக்காம். அதுதான் கொஞ்சம் பேஜாராப் போச்சு. எப்படியோ சமாளிச்சுக்கிட்டு வர்றேன்'' என்று தனது இன்றைய தொழிலைப்பற்றி மளமளவெனப் பொழிந்து நிறுத்தியவன் உற்சாகமாக நிமிர்ந்து, ''ஆங், அதைச் சொல்ல மறந்துவிட்டேனே!... தம்பி, உனக்கு ஒரு நல்ல வேலை பார்த்து வைச்சிருக்கிறேன். இப்போ உன்னை அங்கே அழைச்சுக்கிட்டுப் போகத்தான் வந்தேன்'' என்றான்.

தொய்ந்து துவண்டு நின்ற சபேசன் புத்துணர்ச்சி பெற்றவன்போல் அவனை ஆவலுடன் ஏறிட்டு நோக்கினான்.

அந்த வேலை விஷயத்தைச் சொல்ல வாயெடுத்த நச்சி அதற்குள் யாரையோ கண்டுவிட்டு ஒருவித பரபரப்புடன் தன்னையே ஏற இறங்கப் பார்த்துக்கொண்டான். பிறகு ''தம்பி! நீ இங்கேயே இரு; இதோ வந்துடறேன்!'' என்று சொல்லிக்கொண்டே தன் எண்ணெய் வண்டியை நோக்கி ஓடினான்.

வண்டியின் அடிச் சட்டத்தில் ஒரு காகிதப் பொட்டலம் செருகி வைக்கப் பட்டிருந்தது. அதை எடுத்துப் பிரித்தான். அவனுடைய விலை உயர்ந்த டெரிலின் சட்டையும், டுவிட் பேன்ட்டும் அதிலே இருந்தன. அவற்றை அவசரமாக அணிந்து கொண்டு, பக்கத்திலிருந்த ஒரு பத்திரிகைக் கடைக்கு ஓடி, அழகான அட்டைப் படத்துடன் தொங்கிய ஓர் ஆங்கிலப் பத்திரிகையை விலை கொடுத்து வாங்கிக் கையில் மடித்து வைத்துக்கொண்டான். சிகரெட்டைப் பற்ற வைத்து வெகு ஸ்டைலாகப் புகையை ஊதியவாறு சாலையை நோக்கி இராஜ நடை போட்டுச் சென்றான்.

அதே சமயம், ''ஹல்லோ, மை டியர் டார்லிங்! ஹௌ ஆர் யூ?'' என்று கீச்சுக் குரலில் கேட்டுக் கொண்டே சைக்கிள் ரிக்ஷாவிலிருந்து இறங்கிய ஓர் ஆங்கிலோ — இந்தியப் பெண்மணி அவனை நோக்கி ஒயிலாக நடந்து வந்தாள்.

''இன்னா, மிஸி! எப்படி இருக்கிறே?'' என்று அமர்த்தலாகச் சிரித்த நச்சி அவளுடைய கரத்தைப் பற்றிக் குலுக்கினான்.

''மொள்ள மேன்! மொள்ள மேன்! என்னா இது, பொடலங்காயை முறிக்கிறாப்பலே என் ஹாண்டைப் புடிச்சு புரோக் பண்றே?'' என்று சிணுங்கிச் சிரித்தாள் மிஸியம்மாள்.

இந்தச் சமயம், ''ஏய்! யாருடா இங்கே ரோட்டில் எண்ணெய் வண்டியை நிறுத்தி வைச்சிருக்கிறது?'' என்ற அதிகாரக் குரல் கேட்டது.

நச்சி திரும்பிப் பார்த்தான். அவனுடைய வண்டியின் அருகில் ஒரு போலீஸ்காரர் கோபமாக நின்றுகொண்டிருந்தார்.

''என்னா! மிஸ்டர் நாச்! எதுக்கு இப்படிப் பார்க்கிறே? என் மேலே கோவமா?'' என்று கொஞ்சலும் சிணுங்கலுமாகக் கேட்டாள் மிஸியம்மாள்.

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்...உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகர்யமான ஒரு பவுடர்!



# காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்




கால்கேட்டின் தரமான தயாரிப்பு

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில் ஈறுகளைப் பலப்படுத்துகிறது என்று




வேறு எந்த டூத் பேஸ்ட்டிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை. குழந்தைகள் அதன் இனிய பெப்பர்மின்ட் வாசனையை விரும்புகின்றனர்.




பணத்தை
மிச்சப்படுத்துங்கள்—
பெரிய எகானமி
சைஸை வாங்குங்கள்

CTPA. G. 11 TAM

தஸ்ப்புடன் நின்ற நச்சி தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''அதெல்லாம்ஒண்ணுமில்லே, ரோஸி! திடீர்னு உன்னைப் பார்த்ததும் எனக்கு ரொம்ப 'ஹாப்பி'யாப் போச்சு. அதான் அப்படியே 'கிர்'ரடிச்சு நின்னுப் பிட்டேன்'' என்றான் அசட்டுச் சிரிப்புடன்.

''ஓ....நீ 'லய்' பேசறே டார்லிங்! என்னை 'பிளஃப்' பண்ணப் பார்க்கிறே! எனக்கு எல்லாம் தெரியும்!'' என்று கீச்சுக் குரலில் கூறி அவன் கையைப் பிடித்துக் கொண்டாள் ரோஸி என்ற ரோஸ்லின். அவளுக்கு வயசு சுமார் முப்பது இருக்கும். ஆனால் இளமையின் பொலிவைச் சிறிதும் இழக்காத மாதிரி தோற்றமளித்தாள் அவள்.



''நடிகர் சார்! கஷ்ட நிவாரணத்துக்காகத் தாங்கள் நூறு ரூபாய் நன்கொடை தந்த செய்தி வந்ததே.....''

''ஆமாம்! என் குடும்ப கஷ்ட நிவாரண நிதிக்காக என் மனைவியிடம் அதைக் கொடுத்து விட்டேன்!''

''அட, இன்னடாது இது, வம்பாப் போச்சு!'' என்று தலையைச் சொறிந்து கொண்ட நச்சி பின்னால் திரும்பிப் பார்த்தான். நோட்டும் பென்சிலுமாக அவனுடைய வண்டியைச் சுற்றி வந்த போலீஸ்காரர், பக்கத்திலிருந்த வெற்றிலை பாக்குக் கடைக்காரனிடம் ஏதோ விசாரித்துக் கொண்டிருந்தார்.

சட்டென்று மிஸியம்மாளைப் பின்னால் இழுத்து விட்டு முன்னே சென்ற நச்சி வெகு அலட்சியமாகச் சபேசனை ஏறிட்டு நோக்கி, ''ஏண்டா, தம்பி! அங்கே ரோட்டு மேலே எண்ணெய் வண்டியை நிறுத்திப்பிட்டு இங்கே இன்னு வேடிக்கை பார்க்கிறே? அதோ பார், செவப்புத் தொப்பி வந்து கூப்பிடுறாரு; ஓடு! உன்கூட வண்டி தள்ளிக்கிட்டு வந்தவன் டீ குடிக்கப் போயிருக்கிறான்னு சொல்லி டபாய்ச்சுக்க!'' என்றான்.

இவ்வளவு நேரம் பிரமித்த நிலையில் நின்று அவனுடைய விந்தையான நடவடிக்கைகளை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்த சபேசன், இதைக் கேட்டு மேலும் குழப்பமடைந்தான். நேற்றுப் போலவே இன்றும் தன்னைப் போலீஸில் சிக்க வைக்க இப்படிச் சொல்கிறானோ என்று பயந்து அவனைப் பீதியுடன் வெறித்துப் பார்த்தான்.

''இன்னு பிரதர்! நான் சொல்றது கேட்கலே? சீக்கிரமா ஓடு! இல்லேன்னு அவர் கேஸ் எழுதிப் பிடுவாரு!''

பேந்தப் பேந்த விழித்த சபேசனுக்கு என்னசெய்வதென்றே தெரியவில்லை. சற்று நேரம் தயங்கித் தடுமாறிய அவன், 'உனக்கு ஒரு நல்ல வேலை பார்த்து வைத்திருக்கிறேன்' என்று நச்சி சொன்னது நினைவுக்கு வரவே, தன் பயப்பிராந்தியையெல்லாம் உதறித் தள்ளி விட்டு எண்ணெய் வண்டியை நோக்கி விரைந்தான்.

''வேலையத்தபசங்க! ரோட்டிலே யாராச்சும் ஒரு 'லவ்வர்ஸ்' நின்னு பேசினுப் போதும், மூலைக்கு மூலை 'டாவு' கட்டிக் கிட்டுப் பார்க்க ஆரம்பிச்சுடுவானுங்க!'' என்று எரிச்சலுடன் சொல்லிக் கொண்டே திரும்பிய நச்சி, ''பின்னே, பாரு ரோஸி! அங்கே எண்ணெய் வண்டியை நிக்க வைச்சுட்டு, இங்கே நம்பளை 'நோட்' பண்றான் பையன்! கோவம் வருமா, வராதா?'' என்றான் அலட்சியமாக.

''கண்ட்ரி புருட்ஸ்!'' என்று சிரித்த ரோஸ்லின், ''சில்லி மேட்டர்! லீவ்-இட், டியர்!'' என்றவாறு அவனோடு இழைந்து மோதிக்கொண்டு நின்று, ''அது சரி; நீ என்னு மேன், இப்ப நம்ம ஹோமுக்கே வர மாட்டேங்கறே? என்னை மறந்துட்டியா? இல்லே, என் மேல் எதனுச்சும் கோவமா?'' என்று ஆழ்ந்த துயரக் குரலில் கேட்டாள்.

''டோண்ட் வொர்ரி, மிஸி! கோய்ச்சுக்காதே! நான் இன்னு பண்றது? வேலை ரொம்ப ஜாஸ்தி. கூன் நிமிந்து போவுது. அந்தண்டை இந்தண்டை போகவிட மாட்டேங்கறான் எங்க இஞ்சினீயரு. இப்பக்கூடப் பாரு, டிபன் பண்றதுக்கு ஒரு 'டென்' நிமிஷம் வெளியே போயிட்டு வரேன்னேன்; மூக்காலே அழுவறான். போடா, சோமாறின்னு எழுந்திருச்சு வந்துட்டேன்'' என்று வெகு அமர்த்தலாகவும் சலிப்பாகவும் சொன்ன நச்சி மெல்லப் பின்னால் திரும்பிப் பார்த்தான்.

அந்தப் போலீஸ்காரர் சபேசனிடம் ஏதோ கேட்க, அவன் கையைக் கட்டிக் கொண்டு பயந்து நடுங்கியவாறு பதில் சொல்லிக் கொண்டிருந்தான்.

''ஓ.... ஐ ஆம் வெரி சாரி, டீயர்!'' என்று மகிழ்ச்சியுடன் அவன் கன்னத்தைத் தட்டிய மிசியம்மாள் தன் சாயம் பூசிய உதடுகளைக் குவித்து, ''ஆமாம்; இப்ப நீ என்ன ஆபீஸிலே 'வொர்க்' பண்றே, நாச்?'' என்று மிகவும் அக்கறையாக விசாரித்தாள்.

''அடங்க, இஸ்கி! இவ்வளவு நாளா இது உனக்குத் தெரியாதா?... இப்ப நான் ஒரு இஞ்சினீயர்கிட்டே சூப்பர் வைஸரா வேலை பார்க்கிறேன்! இந்த மெட்ராஸிலே பெரிய பெரிய பில்டிங்குகளையெல்லாம்நாங்கதான்காண்ட்ராக்ட் எடுத்துக் கட்டுறோம்....! அதை ஏன் கேக்கறே போ, ரொம்பப் பேஜார் புடிச்ச வேலை!''

''என்ன மேன், எப்ப கேட்டாலும் ஒரொரு நியூ ஜாப்பா சொல்றே? ஒரு நாளைக்கு மோட்டார் மெக்கானிக் என்கிறே; இன்னொரு நாள் கேட்டா சால்ட் பிஸினஸ் என்கிறே; அதுக்கப்புறம் ஒரு நாள் போட்டோ-கிராப்பர்னு சொல்லிக் கயித்திலே காமிராவை மாட்டிக்கிட்டு வர்றே; இப்பக் கேட்டா சூப்பர்வைஸர் என்கிறே! நான் எதைத்தான் 'பிலீவ்' பண்றது?''

''மினிஸ்டர் வேலை பார்க்கிறதாகச் சொல்லாமல் விட்டேனே, அதைப் பார்!'' என்று தணிந்த குரலில் குறும்பாகக் கூறிச் சிரித்த நச்சி, ''எல்லாத்தையும் நம்பு மிஸி! சொல்றதை எல்லாம் நம்பு! ஏன்ன, நான் ரொம்பப் பெரிய ஆளு!'' என்றவன், ''ஆமாம்; இந்த நேரத்திலே நீ எங்கே இப்படி வந்தே?'' என்று கண்களை இடுக்கிக் கொண்டு கேட்டான்.

''மூர் மார்க்கட்டிலே ஷாப்பிங் பண்ண வந்தேன்!'' என்று குழைந்தாள் மிசியம்மாள்.

''இன்னாது, செகண்ட் ஹாண்டிலே கவுன் வாங்க வந்தியா?''

''நான்சென்ஸ்! என்ன மேன், நம் பளைப் பார்த்து இப்படிக் கேட்கிறே?''

''சரி சரி, புறப்படு; எனக்கு டைம் ஆவுது! லேட்டாப் போனால் இஞ்சினியர் கோவிச்சுக்குவான்.''

''அப்போ நீ எப்ப வருவே?''

''இன்னைக்கு ஈவனிங், சிக்ஸ்-ஓ-கிளாக்குக்குக் கண்டிப்பாகக் 'கம்' பண்றேன்.''

''டோண்ட் ஃபர்கட், டீயர்!...... சீரியோ!....'' என்று கையை உயர்த்தி ஆட்டிக் கொண்டே, 'டக், டக்'கென நடந்து போய் ரிக்ஷாவில் ஏறி அமர்ந்தாள் ரோஸ்லின்.

நச்சியும் எங்கோ அவசரமாகப் போவதுபோல் சற்றுத் தூரம் சென்று, அதே வேகத்தில் திரும்பித் தன் வண்டியை நோக்கி ஓடி வந்தான்.

''இன்னா தம்பி, போலீஸ்காரர் எதனாச்சும் டபாய்ச்சாரா?''

பீதியடைந்த நிலையில் ஒடுங்கி நின்று கொண்டிருந்த சபேசன் சற்றே தைரியம் பெற்றவனாய் நிமிர்ந்து, ''இல்லே, அண்ணா! நீ சொல்லிக் கொடுத்தது போல் சொன்னேன்; சரிதான் என்று போய் விட்டார்!'' என்றான்.

''பார்த்தியா, அதான் கணக்கு. அப்படித்தான் நடந்துக்கணும். இல்லேன்னா, ஒண்ணு ரெண்டை அவுந்துக் கொடுக்கும்படியா ஆகிப்பிடும், கோர்ட்டிலே!'' என்று நகைத்த நச்சி, ''இப்பத்தான் நீ நம்ப வழிக்குத் தயாராகிக் கிட்டு வர்றே! இனிமேல் பயமில்லை; பொழைச்சுக்குவே! சரி, வா; போவலாம்!'' என்றவாறு வண்டியை இழுத்துக்கொண்டு நடக்கலானான்.

பேன்ட்டும் சிலாக் சட்டையுமாக அவன் வண்டி இழுத்துச் செல்வதைக் காணச் சபேசனுக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. அந்த ஆங்கிலோ-இந்தியப் பெண்ணிடம் அவன் நடத்திய நாடகத்தைப் பற்றிக் கேட்க வாயெடுத்தான். அப்படிக் கேட்டால், தனக்குப் பிடிக்காத விஷயத்தை அவன் சொல்ல, அதனால் அவனை வெறுக்கும் படியாகி விடுமோ என்று அஞ்சினான்.

ரிப்பன் மாளிகையின் வாயிலைக் கடக்கும்போது சாலையி லிருந்தவாறே உள்ளே எட்டிப் பார்த்தான் சபேசன். சற்றுமுன் முகப்புக் கூடத்தில் நின்று கொண்டிருந்த வேதாளை இப்போது அங்கு காணோம். அவள் வரவில்லை என்று எண்ணிப் போய் விட்டாள் போலும்!

**சைனா** பஜார் பழக் கடைக்கு எதிரிலுள்ள ஒரு குறுகலான சந்தில் நுழைந்த நச்சி, 'ஏழுமலையான் பிரஸ்' என்ற போர்டு தொங்கிய ஓர் அச்சகத்துக்கு எதிரே தன் கிரோஸின் வண்டியை நிறுத்திவிட்டு உள்ளே போனான். 'இங்குதான் எனக்கு வேலை பார்த்து வைத்திருப்பானோ?' என்று யோசித்தவாறு ஆவலும் துடிப்புமாக அவனைப் பின்தொடர்ந்து சென்றான் சபேசன்.

''குட் மார்னிங் சார்!''

சிறியதோர் அறையில் மேசைக்கு எதிரே அமர்ந்து டெலிபோனில் ஏதோ பேசிக் கொண்டிருந்த அச்சக உரிமையாளர் ஸ்ரீமான் கண்ணபிரான், நச்சியைப் பார்த்துப் புன்முறுவலுடன் தலையாட்டிவிட்டு, மீண்டும் தம் பேச்சில் ஈடுபட்டார்.

பின்னால் நின்ற சபேசனை மெல்லச் சீண்டி, முதலாளிக்கு வணக்கம் செய்யு

மாறு ஜாடை காட்டினுன் நச்சி. தன் தவற்றை உணர்ந்த சபேசன் சட்டென்று கரம் குவித்தான்.

டெலிபோன் ரிஸீவரை வைத்து விட்டு நிமிர்ந்த கண்ணபிரான் உள்ளே திரும்பிப் பார்த்து, ''என்னப்பா, சாமிக்கண்ணு! பைண்டரைக் கூப்பிட்டுக் 'கட்டிங் மிஷின்' கிட்டே குவிச்சு வைச்சிருக்கிற பேப்பர் ஜல்லிகளை யெல்லாம் ஒரு கோணியில் போட்டுக் கட்டச் சொல்லு!'' என்ருர்.

இதைக் கேட்ட நச்சியின் முகம் மலர்ந்தது. பணிவுடன் தலையைச் சொறிந்து, ''இவன்தான் சார், நான் சொன்ன அந்தப் பையன்!'' என்ருன்.

மெல்லத் தலையாட்டிக் கொண்ட கண்ணபிரான், ''இங்கு வழக்கமாக ஜல்லி எடுக்கிறவன் சற்றுமுன் வந்து கேட்டுவிட்டுப் போயிருக்கிருன். ஆனுலும் உன்னுடைய ஆளுக்குத்தான் தருவதென்று முடிவு செய்திருக்கிறேன். அயல் தேசங்களின் கெடுபிடிகளால் வாழ்விழந்து சொந்த நாட்டுக்கு ஓடி வரும் நமது சகோதரர்களுக்கு நம்மால் இயன்ற உதவிகளை நாம் செய்தே ஆக வேண்டும்: அது நம் கடமை. அப்படி வந்த ஒருவனுக்கு இன்று இந்தச் சிறு உதவியையாவது செய்ய ஏழுமலையான் எனக்குச் சந்தர்ப்பம் அளித்தானே என்பதற்காக நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். இன்றைக்கு இவன் எடுத்துப் போகிற ஜல்லிக்குப் பாதி விலை கொடுத்தால் போதும். இனி வாரம் ஒருமுறை திங்கட்கிழமை வாக்கில் வந்து ஜல்லிகளை வாங்கிக் கொண்டு போகலாம்'' என்ருர்.

''ரொம்ப நன்றி, சார்!'' என்று குழைந்த நச்சி, ''இன்னு தம்பி, நிக்கிறே? போ உள்ளே! குப்பைகூளம் இல்லாம ஜல்லிகளைப் பிராஞ்சிக் கோணியிலே போட்டுக் கட்டு!'' என்ருன் கிசுகிசுத்த குரலில்.

''வேண்டாம், அப்பனே! அந்த வேலைகளை என் ஆட்களே செய்துவிடுவார்கள்'' என்று சொன்ன அச்சக முதலாளி, ''உன்னைச் சொல்வதாக நினைக்காதே, நச்சினுர்க்கினியன்! இங்கே ஜல்லி வாங்க வருகிற ஆட்கள், ஜல்லியுடன் ஈய எழுத்துக்களையும், பித்தளை ஸ்டிக்குகளையும் சேர்த்துக்கட்டி எடுத்துக் கொண்டுபோய் விடுகிருர்கள். அதனுல் நான் யாரையும் உள்ளே விடுவதில்லை. நாம் நல்லவர்களாக இருந்தால் மட்டும் போதாது; பிறரும் நல்லவர்களாகவே இருந்து வருமாறு நம்முடைய பேச்சிலும் செயலிலுமாகக் கவனித்து விழிப்புடன் நடந்துகொள்ள வேண்டும்'' என்ருர்.

(தொடரும்)




பங்களூரிலுள்ள இந்திய ஸயன்ஸ் இன்ஸ்டிட்யூட்

## ...பிரதமருக்கு ஒரு கடிதம்



| | | |
|---|---|---|
| எம். எஸ்ஸி. பட்டதாரிகள் | 104 | பேர்கள் |
| பி. இ. பட்டதாரிகள் | 113 | பேர்கள் |
| பி. எஸ்ஸி. பட்டதாரிகள் | 106 | பேர்கள் |
| மற்ற பட்டதாரிகள் | 20 | பேர்கள் |
| ஆகமொத்தம் | 343 | பேர்கள் |

இவர்களில் டாக்டர் பட்டத்துக்காக (பி.எச்டி.) ஆராய்ச்சிகள் செய்து வருவோர் 115 பேர்கள். இரண்டு, மூன்று பட்டங்களைப் பெற்றவர்களும் இவர்களில் பலர் உண்டு. இந்த ஸ்தாபனத்திலிருந்து இந்த 343 பேர்களும் சேர்ந்து ஒரே விஷயத்தை வலியுறுத்திப் பிரதமருக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார்கள்.

இத்தனை அறிஞர்களும் சேர்ந்து பிரதமருக்கு எழுதிய அப்படிப்பட்ட அதிமுக்கியமான விஷயம் என்ன?

71ம் பக்கம் பார்க்கவும்

# சிரிக்கவும் சிந்திக்கவும்

சென்னையில் சென்ற சில வாரங்களாக இரவு பகலென்று பாராமல் மக்கள் 'க்யூ'வில் நிற்கிறார்கள். அரிசி அல்லது காப்பிக் கொட்டைக்காக அல்ல. சில சினிமாக் கொட்டகைகளில் இரவு வாழ்க்கைப் படங்களைப் பார்க்கத்தான்!

'பாரிஸ் ஷாம்பேன்' என்று ஒரு படம். இதில் ஒரு பிரெஞ்சுப் பெண் பாரிஸ் நகரத்தில் உள்ள 'இராக் கேளிக்கை கிளப்'கள் பலவற்றுக்கு விஜயம் செய்கிறாள். 'இரவில் டோக்கியோ' என்ற படத்தில் ஜப்பானியப் பெண்களைப் பார்க்கலாம். பிரெஞ்சுப் பெண்களையும் ஜப்பானியப் பெண்களையும் மட்டும் பார்த்தால் மற்றத் தேசப் பெண்கள் கோபித்துக் கொள்ள மாட்டார்களா? அதற்காக '' இரவில் பெண்கள் '' படத்தில் பல தேசங்களின் பெண்களைப் பார்க்க வசதி ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.







'' மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம் ''—தமிழகத்திலா இந்தக் காட்சிகள்?

இப்படியே இரவில் அமெரிக்கா, இரவில் உலகம், இரவில் அண்டசராசரம் என்றெல்லாம் இரவுக் கேளிக்கைகளைப் பற்றிய பலப்பல படங்கள்போட்டி போட்டுக் கொண்டு வெளி வருகின்றன.

ஒரு பெண்ணின் உடல் அவயவங்களை எத்தனை எத்தனை கோணங்களில் காண்பிக்க முடியும் என்பதை இந்தப் படங்களில் நடனங்கள் என்பவற்றின் மூலமாக எடுத்துக்காட்டி யிருக்கிறார்கள். இரண்டு, அல்லது அதிகமானால் மூன்று கைக் குட்டைகளுக்கான துணியை மட்டுமே ஒரு பெண் எப்படி உடுத்திக்கொள்ள முடியும் என்ற ரகசியத்தையும் இந்தப் படங்களின் மூலம் அறிந்து கொள்ளலாம்! ''குழந்தைகளே! உங்களுக்கு இந்தப் படத்தைக் காண்பிக்க முடியாததற்காக வருந்துகிறோம். இவற்றை உண்மையிலேயே பதினெட்டுக்கு மேலான வயதான ஆண், பெண்களே பார்க்கலாம்!'' என்று படம் காண்பிப்பவர்கள் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே பதினெட்டு வயதான படித்த, படித்துக் கொண்டிருக்கும் ஆண், பெண்களே நீண்ட வரிசையில் நின்று டிக்கட்டுகளை வாங்கி இந்தப் படங்களைப் பார்த்து வருகிறார்கள்!

இந்தப் படங்களை சென்ஸார் போர்டார் 'தாறுமாறாக' வெட்டி எறிந்துவிட்டு வெறும் 'சக்கை'யைத்தான் மக்கள் பார்க்க அனுமதித்திருக்கிறார்கள் என்ற குறை வேறு பலருக்கு இருக்கிறது. 'பெரியவர்களுக்கு மட்டுமே' என்றிருப்பதால் சென்ஸார்

போர்டார் இன்னும் கொஞ்சம் 'தாராள' மனப்பான்மையுடன் நடந்து கொள்ளலாம் என்கிறார்கள். 'ஹிந்து'வில் கடிதம் எழுதிய ஒருவர் இப்படிக் கண்டபடி வெட்டிவிட்டுப் படங்களைத் திரையிடுவதற்குப் பதில் படத்தை வெளியிடவே கூடாது என்று தடை விதித்து விடுவது மேல் என்று கூறியிருக்கிறார். மேலும் எக்கச்சக்கமாக வெட்டப்பட்ட இத்தகைய படங்களைப் பார்க்கும்போது பணத்தைக் கொடுத்த மக்களுக்குத் தாங்கள் ஏமாற்றப்பட்டு விட்டது போன்ற நியாயமான உணர்ச்சி ஏற்படுகிறது. இந்தப் படங்கள் திரையிடப்பட வில்லையானால் நாட்டுக்கோ மக்களுக்கோ ஒரு நஷ்டமுமில்லை; ஆனால் லாபமுண்டு: அந்நியச் செலாவணி மிச்சமாகும் என்கிறார். மிகவும் சரியான கருத்துக்களைக் கொண்ட கடிதம்.

கூட்டம் அதிகமாகச் சேர்க்கவேண்டும் என்பதற்காக ஆபாசமான முறையில் இப்படங்கள் விளம்பரப் படுத்தப்படுகின்றன. படத்தில் இல்லாத அல்லது சென்ஸாரால் வெட்டப்பட்ட காட்சிகள்கூட மக்களை ஏமாற்றும் வகையில் விளம்பரங்களில் இடம் பெறுகின்றன. பெண்மையை இழிவுபடுத்தும் வகையில் இப்படி விளம்பரப்படுத்துவது மிகத் தவறு என்று சில ஆடவர்களும் மாதர்களும் இந்தச் சினிமாத் தியேட்டர்களின் முன்னால் எதிர்ப்புத் தெரிவித்துக் கண்டனக் குரலும் எழுப்பினார்கள்.

உலகத் தலைநகரங்கள் பலவற்றில் நடப்பதைத்தானே படத்தில் பார்க்கிறோம், இவர்கள் எதற்கு எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டும் என்று சிலர் கேட்கலாம். எந்நாட்டவராயினும் என்ன, பெண் குலம் இத்தருணத்தில் இழிவுபடுத்தப்படுவது தமிழ் மண்ணில்தானே என்று இவர்கள் திருப்பிக் கேட்கக் கூடும். மேனாடுகளில் இரவுக் கேளிக்கை கிளப்புகளும் அவற்றில் அரை நிர்வாணமாக நடனமாடும் பெண்களும் இருக்கின்றனர் என்றால், 'இருந்துவிட்டுப் போகட்டும்; அவற்றை இங்கேயும் பிரபலப்படுத்த வேண்டிய அவசியமென்ன?' என்று கேட்டால் அந்தக் கருத்தில் உண்மை இருக்கிறதல்லவா?

ஃ ஃ ஃ ஃ

சென்ஸார்கள் இந்த 'இரவுக் கேளிக்கை'ப் படங்களை நிறைய வெட்டித் தள்ளுவது ஒருபுறமிருக்க, சில தமிழ், ஹிந்தி சினிமாக்களில் ஆபாசத் தொனிப் பொருளுடன் அமைந்திருக்கும் வசனங்களையும் பாடல்களையும் அப்படியே விட்டுவிடுகிறார்கள். இரவில் டோக்கியோ, இரவில் பெண்கள் போன்ற படங்கள் உலகத் தலைநகரில் உள்ள பல ஆபாசங்களைக் காண்பிப்பதாக ஒளிவுமறைவின்றி ஒப்புக்கொள்ளுகின்றன. ஆனால் சிறியோர், பெரியோர் எல்லோராலும் பார்க்கப்படும் நமது தமிழ், ஹிந்திப் படங்கள் பலவற்றில் ஆபாசம் வேண்டுமென்றே மறைபொருளாகவும் தொனிப் பொருளாகவும் வசனங்களிலும் பாடல்களிலும் இடம் பெறுகின்றன. இந்த ஏமாற்று வித்தை முன்னதைக் காட்டிலும் மோசமானதாகும்; வெட்கத்துக்குரிய விஷயமுமாகும். பாடல்களையோ வசனங்களையோ கேட்பவர்கள் எதற்காக, எந்த அர்த்தத்தில், குறிப்பிட்ட இந்த வார்த்தைகள் இந்தக் காட்சியில் பேசப்படுகின்றன என்பதனை எளிதில் ஊகிக்கும்படி அமைந்தும் சென்ஸார்கள் இதனை அறிய வில்லையோ அல்லது அறிந்தும் ஏதும் செய்ய முடியாத நிலையில் உள்ளார்களோ, தெரியவில்லை.

ஃ ஃ ஃ ஃ

மேனாட்டுப் பெண்கள் அந்நாட்டுச் சமூக வாழ்வில் தாராளமாய் அனுமதிக்கப்படும் விதத்தில் உடல் தெரியும் வகையில் உடை அணிந்தால் அது ஆபாசமாகத் தோன்றுவதில்லை. ஆனால் அதே பாணியைப் பின்பற்றி நமது நட்சத்திரங்கள் ஆடை அணிந்து ராக் அண்ட் ரோல், டுவிஸ்ட் போன்ற நடனங்களின் சாயலைக் கொணர்ந்து ஆடும்போது ஆபாசமும் அருவருப்பும் உச்சகட்டத்தை அடைகின்றன.

அமெரிக்க, பிரிட்டிஷ், பிரெஞ்சுப் படங்களிலிருந்து எத்தனையோ நல்ல விஷயங்களை நாம் கற்றுணரலாம். காமிரா டெக்னிக்குகள், டைரக்ஷன் நுணுக்கங்கள், நடிப்புத் திறன், விறுவிறுப்பான கதை, வசன அமைப்பு போன்றவற்றை யெல்லாம் அப்படங்களைப் பார்த்துப் படிப்பினை பெறலாம். அத்துடன்

திருத்திக்கொள்வது நலம்; வேண்டாத விஷயங்களைக் கடன் வாங்கி நமது படங்களில் புகுத்துவது கவலைக்குரிய விஷயம்.





காலம் பறக்கிறது...ஆயினும் அவள் எழில் நிலைக்கிறது



# கயல் விழி

> "இந்தப் பெண்மணியைப் பத்திரமாகத் தோணியில் ஏற்றி விட்டுக் காவேரியின் எதிர்க் கரைக்கு அனுப்பிவிட வேண்டும். நம் வீரர்கள் கேட்டால் நான் அனுப்பியதாகச் சொல்!"



## அகிலன்

### இருபத்திரண்டாம் அத்தியாயம்

## அழிவுக்கு எதிர்முனை

**வீ**ர நரசிம்மனிடம் அவரது படைத் தலைவர் கூறிய செய்தி இதுதான்: 'சுந்தர பாண்டியன் மகேந்திரமங்கலத்தை அடுத்த காவேரியாற்றங்கரையில் படை முகாம் அமைத்துக் கொண்டு, வீரநரசிம்மன் மீது போர் தொடுப்பதற்குக் காத்திருக்கிறான்!'

இந்தச் செய்தியைக் கூறிய படைத் தலைவரின் குரலிலிருந்தே சுந்தர பாண்டியனின் மெய்த் துணிவையும் படை பலத்தையும் ஊகித்துக் கொள்ள முயன்றார் சக்கரவர்த்தி. அவருக்கு விவரம் தெரிந்த காலமாக வீரநரசிம்மன் இப்படி ஒரு செய்தியைக் கேள்வியுற்றதில்லை. வழக்கமாகப் படையெடுத்து முன்னேறித் தாக்குபவர்கள் கோசல நாட்டுப் படையினராகத்தான் இருப்பார்கள். மற்றவர்களோ தற்காப்

புக்காகப் போரிடுவார்கள்; பின் வாங்குவார்கள்; முடிவில் பணிந்து விடுவார்கள். சுந்தர பாண்டியனே கோசலப் படையினரின் வரலாற்றையே மாற்றி, அவர்களையே தற்காத்துக் கொள்ளும்படி அறைகூவல் விட்டு விட்டான்.

''வந்தவன் நேரடியாகக் கண்ணனூர்க் கோட்டையைத் தாக்காமல் ஏன் தயங்கி நிற்கிறான்?'' என்று கேட்டார் வீர நரசிம்மன்.

''சக்கரவர்த்திகள் வந்த பிறகுதான் அவன் வாளெடுத்துப் போர் தொடுப்பானும்; சக்கரவர்த்திகளோடு அவன் போர் புரியும் போதுதான் யுத்தமும் தொடங்கப் பெறுமாம். நம்முடைய ஒற்றர்கள் அவனைப் பற்றிச் சில விசித்திரமான செய்திகளைக் கூறுகிறார்கள். நேரில் அவனைப் பார்த்து விட்டு வந்திருக்கிறார்கள்.''

''நேரில் பார்த்து விட்டு உயிருடன் திரும்ப முடிந்ததா நம் ஒற்றர்களால் !''

''அவனே கட்டுக்காவலுடன் அவர்களைத் திருப்பி அனுப்பி யிருக்கிறான். செய்திகளையும் வெளிப்படையாகவே அவர்களிடம் பேசி யிருக்கிறான்....''

வியப்பும் திகைப்பும் மாறி மாறி எழுந்தன வீரநரசிம்மனுக்கு. ஒற்றர் தலைவனை அழைக்கச் செய்து அவனிடம் விசாரித்தார். ஒற்றர் தலைவன் விவரம் கூறினான்.



# அதிசயமான புதுமுறை தயாரிப்பு

## பெப்ஸோடெண்டின் அற்புத நுரை உங்கள் பற்களின் வெண்மையை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள்: புது முறைப்படி தயாராகும் பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இந்த அற்புத நுரை பற்களைப் பாழாக்கும் பழுப்பை அகற்றி அவைகளை இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கச் செய்கிறது...வாயைச் சுத்தம் செய்வதுடன் பெப்பர்மிண்டின் சுவையையும் அளிக்கிறது.




இந்துஸ்தான் லீவர் லிமிடெட்
இந்தியாவில் தயாரிப்பது

''எவ்வளவு படைகள் வந்திருக்கின்றன என்பதைக் கண்காணிப்பதற்காகச் சோழ நாட்டுக் குடியானவர்களைப் போல் நாங்கள் ஆற்றின் மறு கரைக்குச் சென்றோம். தொலைவிலிருந்து கொண்டே கண்ணோட்டம் விட்டோம். நாங்கள் திரும்பும் சமயத்தில் எங்களைப் பிடித்துச் சுந்தரபாண்டியன் முன்னால் நிறுத்தி விட்டார்கள் பாண்டிய வீரர்கள்.''

''படையில் எவ்வளவு பேர்கள் இருப்பார்கள் ?''

''இங்கே வந்திருக்கும் நமது படைகளும் திருமுனைப்பாடியில் போர் புரியும் படைகளும் ஒன்றுசேர்ந்தால் எவ்வளவு பேர்கள் இருப்பார்களோ அவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள்'' என்றான் ஒற்றர் தலைவன்.

''என்ன!'' திடுக்கிட்டார் சக்கரவர்த்தி.

''அதைப் போல் இன்னும் இரு மடங்கு படையினர் தென்பாண்டி நாட்டிலிருந்து வந்து கொண்டிருப்பதாகப் பேசிக் கொள்ளுகிறார்கள். அவர்களுக்காகப் பாசறை அமைக்கும் வேலைகள் நடந்து கொண்டிருந்ததையும் நாங்கள் கண்டோம்.''

அச்சம் என்பதையே அறியாதிருந்த மாவீரர் முதன் முதலாக அது தம் முன்னே தலை நீட்டுவதை உணர்ந்தார். உடனடியாக அதை உதறி விட்டு ''அவன் உங்களை எப்படித் திருப்பி அனுப்பத் துணிந்தான்?'' என்று கேட்டார்.

''காவல் வீரர்கள் எங்களைக் கைப்பற்றிப் பாண்டியனுக்கு முன்னால் கொண்டு போய் நிறுத்தினார்கள். அவன் எங்களைப் பொருட்படுத்தவே இல்லை. 'ஒற்றர்கள்தானே? அவர்களை அவர்கள் விரும்பும் இடங்களுக்கெல்லாம் அழைத்துச் சென்று காட்டுங்கள். அவர்கள் விரும்பும் செய்திகள் அனைத்தையும் அவர்களிடம் கூறுங்கள். கோழைகளிடமும் ஆண்மையற்றவர்களிடமும்தான் இரகசியம் மிகுந்திருக்கும். இங்கே வந்திருப்பதும், கடல் போல் பின்னால் வந்து கொண்டிருப்பதும் சுந்தரபாண்டியனின் படை என்பதை மட்டும் அந்தச் சக்கரவர்த்தியிடம் சொல்லச் சொல்லுங்கள்!' என்றான். தங்களுடைய வருகைக்காகவே போர் தொடங்காமல் காத்திருக்கிறான் என்ற செய்தியும் கிடைத்தது.''

வீரநரசிம்மன் சிந்தனையில் ஆழ்ந்தார். அவனுடைய நடவடிக்கைகளை அவரால் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. விசித்திரமான பகைவனாக அவன் அவருக்குத் தோற்றமளித்தான். பாவம்! 'தென்பாண்டி நாட்டிலிருந்து கடல்போல் வந்து கொண்டிருக்கும் பெரும் படை' புலவனாகிய அவன் உருவாக்கிய கற்பனைப் படை என்பதை அவர் அறிந்தாரில்லை.

சொல் வன்மை, நாவன்மை ஆகிய கூர்மையான போர்க் கருவிகளை அவன் சிந்தனையிலிருந்து ஏவிவிட்ட வண்ணம் இருந்தான். காவேரி ஆற்றைக் கடந்து வந்த அந்த ஆயுதங்கள் கோசலப் படையினரின் நெஞ்சில் தாக்கிப் பயத்தையும் பீதியையும் கிளறி விட்டவண்ணமாக இருந்தன. புதிய போர்க் கருவியாகிய சொல்லாயுதத்தை அதில் வலியவராண வள்ளுவர் என்ற மாவீரரிடம் பயின்றவனல்லவா அவன்?

படைத் தலைவர்களோடு கண்ணனூரர்க் கோட்டை மாளிகைக்குள் வீர நரசிம்மன் மந்திராலோசனை நடத்தினார்.

''வயதில் இளையவன்; சிறு நாட்டுத் தலைவன்; இந்த நிலையிலும் நம்மை எதிர்க்கத் துணிந்து விட்டான். நாம் தயங்கிப் பயனில்லை. வீரர்களுக்கு வெறியூட்டி முழுமூச்சோடு போரைத் தொடங்க வேண்டியதுதான்'' என்றார் சக்கரவர்த்தி.

''செய்ய வேண்டியதுதான். ஆனால்....''

''என்ன?''

''இந்தப் போரில் எப்படியும் நமக்கு வெற்றி கிடைக்கும். ஆனால் வீரர்களில் முக்கால் பகுதிப் பேர்களுக்கு மேல் நாம் இழக்க வேண்டியிருக்கும். போர் மற்றப் போர்களைப் போல் எளிதாக இருக்காது. இந்தப் போரில் நாம் வெற்றி பெற்றாலும், இந்த வெற்றிக்குப் பிறகு நம்முடைய சாம்ராஜ்யத்தின் பலம் பாதிக்கு மேல் சரிந்துவிடும்—மீண்டும் இவன் படையெடுக்கக் கூடும்!''

''என்ன செய்வது?'' என்று கேட்டார் சக்கரவர்த்தி.

''திருமுனைப்பாடிப் போர் முடிந்து அந்த வீரர்களும் இங்கு வந்தால் விரைவில் வெற்றி கிடைக்கும்'' என்றார் படைத் தலைவர்.

முடிவு ஏதும் கூறாமலே சபையைக் கலைத்தார் வீரநரசிம்மன். சுந்தரபாண்டியனை முன்பு கங்காபுரியில் அவர் சந்தித்த காட்சி அவர் கண் முன்னே வந்தது. அழகன், இளைஞன், அறிவாற்றலும் கலைப்பயிற்சியும் கொண்டவன்; பண்பிலும் பணிவிலும் அவனது தனிச் சிறப்புக்கள் அன்றே அவருக்கு விளங்கின. 'அவன் இன்று பயங்கரப் பகைவனாக முளைத்து வந்து நமக்கு முன்னே தோள் தட்டிக்

கொண்டு நிற்கிறான்! பாமினியோ அவனைக் கரம் பற்றிக் கணவனாக அடையத் துடிக்கிறாள்!'

பாமினியைச் சந்திப்பதற்காக மாளிகையின் பின்புறம் வந்து கொண்டிருந்த சக்கரவர்த்தி, பாமினியும் கயல்விழியும் ஏதோ இரகசியமாகப் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டார். சுவரின் மறைவிலிருந்து கொண்டு சாளரத்தின் வழியாக நடக்கும் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நோக்கினார். இரு பெண்களும் ஒருவரை யொருவர் கட்டிக் கொண்டு அழுதார்கள். இருவரும் இரகசியமான குரல்களில் வாதிட்டுக் கொண்டார்கள். பிறகு பாமினி ஓர் ஓலையை எழுதிக் கயல்விழியின் கரத்தில் கொடுத்தாள். தன்னுடைய மோதிரத்தைக் கழற்றி அவளுடைய விரலில் அணிவித்தாள். கோசல நாட்டுப் புலித்தலை பொறித்த இலச்சினை ஒன்றையும் அவளிடம் கொடுத்தாள். அது பெண்கள் தங்கும் இடமாதலால் அங்கு வேறு யாரும் வர முடியாது என்ற நினைப்பில் அவர்கள் சற்று மனம் விட்டே பேசிக் கொண்டார்கள்.

நேரம் மாலை மயங்கும் நேரம். இருட்டிக் கொண்டு வரும் நேரம். மாளிகையில் பணியாளர்கள் தீபந் தங்களை ஏந்தி ஒவ்வொரு விளக்காக ஏற்றிய வண்ணம் நடந்து கொண்டிருந்தார்கள்.

சக்கரவர்த்தி சரேலென்று இருட்டில் மறைந்து மீண்டும் வெளியில் வந்தார். அவர் வெளியில் திரும்பி வந்தபோது அவருக்கு வெண் தாடி காடு போல் மண்டிக் கிடந்தது. காவலர்கள் தலைவனைப் போன்ற உடைக்குள் அவரது கம்பீரமான தோற்றம் மறைந்து கொண்டது.

பாமினி வீரனை அழைப்பதற்காக அருகில் தொங்கிய செம்புத் தகட்டில் ஓங்கியடித்தாள். கிழவர் ஓடோடியும் சென்று வணங்கி நின்றார்.

''இந்தப் பெண்மணியைப் பத்திரமாகத் தோணியில் ஏற்றி விட்டுக் காவேரியின் எதிர்க் கரைக்கு அனுப்பி விட வேண்டும். நம் வீரர்கள் கேட்டால் நான் அனுப்பியதாகச் சொல்!''

''சக்கரவர்த்திகள் கேட்டால்....?''

''அவருக்குத் தெரிய வேண்டுமென்பதில்லை. தெரிய நேர்ந்தாலும் பாதகமில்லை. நம்முடைய இலச்சினை இவளிடம் இருக்கிறது.''

தயங்குவது போல் தயங்கிவிட்டு, ''சித்தம் இளவரசி!'' என்று கரகரத்த குரலில் கூறினார் கிழவர்.

மீண்டும் பாமினி கயல்விழியைக் கட்டிக் கொண்டு கண்ணீருடன் விடை கொடுத்தாள். ''நாம் வெற்றி பெறுவோம்; இல்லாவிட்டால் காவேரித் தாயின் மடியில் நாம் இருவருமே ஒன்றாய்த் தஞ்சம் புகுந்து விடுவோம்'' என்றாள் பாமினி.

முன்னிருட்டு வேளையில் காவேரியைக் கிழித்துக் கொண்டு ஒற்றைத் தோணி எதிர்க் கரையை நாடிச் சென்றது. தோணியில் கயல்விழி மட்டிலுமே தனித்திருந்து துடுப்பு வலித்தாள். மறு கரையிலிருந்த சுந்தரபாண்டியனின் வீரர்கள் அந்தக் காட்சியைக் கண்டு திகைத்து நின்றார்கள். படைவீடுகள் உள்ள இடத்துக்கு இரவு நேரத்தில் தனித்து வரத் துணிந்தவள் யார்?

### இருபத்துமூன்றாம் அத்தியாயம்

## நீரும் நெருப்பும்

சுந்தரபாண்டியனின் பாசறைக்குள் அப்போதுதான் அந்தரங்கப் போர்த் திட்டங்கள் ஒருவாறு ஆலோசிக்கப் பெற்று முடிவடைந்தன. ஆலோசனைகளில் பங்கு கொண்ட மழவச் சக்கரவர்த்தியும் அழகப் பெருமாளும் தங்களது முகங்களில் எவ்வித உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தாது தங்களது பாசறைகளுக்குச் சென்றனர்.

வீரநரசிம்மன் கண்ணனூருக்கு வந்து விட்ட செய்தி மகேந்திரமங்கலத்துக்கு எட்டியது. அடுத்தாற்போல் எந்தக் கணத்திலும் கோசல நாட்டுப் போர்ப் பறைகளைக் காவேரியின் எதிர்க் கரையில் கேட்கலாம். பொழுது விடிந்தால் அது போர்த் தொடக்கப் பொழுதாகத் தான் விடியும்.

சுந்தர பாண்டியன் எல்லாவிதப் போர்த் தந்திர முறைகளையும் கைக்கொண்டு பகைவர்களிடையே பெரும் குழப்பத்தை ஏற்படுத்தி வந்தானென்றாலும், அவனுக்குத் தன் வலிமையையும் பகைவர் வலிமையையும் சீர்தூக்கத் தெரியாமலில்லை. அவனுடைய படையினரில் ஒரு பகுதியினர் கங்காபுரியிலும் சோழ நாட்டிலும் இருந்தார்கள். அவர்களை அவன் திருப்பி அழைத்துக் கொள்ள முடியவில்லை.



காதலி: நம்ம காதல் விஷயத்தை எங்கப்பாகிட்டே நாமே சொல்லத் தேவையில்லே!

காதலன்: ?....

காதலி: எங்கப்பா ஒரு ஸி. ஐ. டி.யாக்கும்..!

கோப்பெருஞ்சிங்கனுடைய படைகளுக்குத் துணையாகத் திருமுனைப்பாடி நாட்டுக்கு அதில் ஒரு பகுதியை அனுப்பி விட்டான். வந்திருக்கும் புலவர்கூட்டம், கலைஞர் கூட்டம் இவர்களையெல்லாம் போர்வீரர்கள் என்று கோசல நாட்டு ஒற்றர்கள் நம்பும்படியாகச் செய்தாயிற்று. பின்னால் வந்து கொண்டிருக்கும் தென்பாண்டிப் படைக் கடல் பற்றியும் பறைசாற்றியாயிற்று. ஆனால் உண்மையில்?....

''நம்முடைய உண்மையான படை பலத்தை அவர்கள் தெரிந்து கொள்வதற்கு முன்பாகவே, நாம் பாதி வெற்றியை அடைந்துவிட வேண்டும்!'' என்றான் சுந்தரபாண்டியன்.

''நாம் இந்தப் போரில் முழு வெற்றி பெறுவோம் என்று கூற முடியாது. ஆனால் பெருத்த சேதத்தை அவர்களுக்கு விளைவித்து, அவர்களது வலிமையை இப்போது குறைத்துவிடலாம்; அடுத்த போரில்தான் நாம் வெற்றியைக் கைப்பற்ற முடியும்'' என்றார் மழவச் சக்கரவர்த்தி.

சுந்தரபாண்டியனுக்கு அடுத்த போர் என்பதில் நம்பிக்கை இல்லை. வெற்றி அல்லது வீர மரணமே அவனது முடிவு. மின்னல் வேகத்தில் நடைபெறும் போர் நிகழ்ச்சிகளில், துரும்பைப் போன்ற ஒரு நிகழ்ச்சி தனக்குச் சாதகமாக அமைந்தாலும், அதைத் தூணாகக் கொண்டு பகைவரை அழிக்க விரும்பினான்.

இந்தச் சமயத்தில்தான் பாசறைக்கு வெளியில் குதூகலம் நிறைந்த ஆரவாரம் கேட்டது. கயல்விழியின் வரவு கண்ட வீரர்கள் கொற்றவைத் தேவியையே கண்டுவிட்டவர்கள் போல் பேரானந்தம் கொண்டார்கள். விழுப்பரையரோடு அவள் காஞ்சிக்குத் தூது சென்ற செய்தியும் படைத் தலைவர்கள் பலருக்குத் தெரியும்.

பாசறையின் முகப்புக்கு வந்து அவளை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றான் சுந்தரபாண்டியன். வீரர்கள் விடை பெற்றுச் சென்றனர். இனம் புரியாத ஏதோ ஒரு நம்பிக்கை அவர்களிடம் ஏற்பட்டது. எதிர்பாராத வகையில் தங்களுக்கும் பாண்டிய நாட்டுக்கும் இடீரென்று நன்மை பிறந்துவிட்டது போல் அவர்கள் உணர்ந்தார்கள். பாண்டிய நாட்டின் சிம்மாசனத்தில் இளைய பாண்டியனின் அருகில் வீற்றிருக்கப் போகிறவள் கயல்விழி தான் என்ற எண்ணமும் அவர்களுக்கு உண்டு.

பாசறைக்குள்ளே தூண்டாமணி விளக்கு சின்னஞ்சிறு சுடர்விட்டு நிலவொளி போன்ற மங்கலான ஒளியைக் கசிய விட்டுக் கொண்டிருந்தது. சுந்தர பாண்டியன் அப்போது இந்த உலகம் முழுவதையுமே மறந்த நிலையில் இருந்தான். மெய்யாகவே கயல்விழி உயிரும் உடலுமாக அந்தப் பாசறைக்குள் அடி எடுத்து வைத்திருக்கிறாளா, அல்லது அவ்வளவும் கனவு மயக்கந்தானா என்ற ஐயம் எழுந்து விட்டது அவனுக்கு.

அந்த ஆற்றங்கரைப் பொட்டல் வெளிக்கு, பாசறைகள் சூழ்ந்த பயங்கரமான போர்க்களத்துக்கு, நள்ளிருளுக்குச் சற்று முன்பாக அவள் எங்ஙனம் வந்து சேர்ந்தாள் ?

அது பாசறை என்பதோ ஆயிரமாயிரம் வீரர் கூட்டம் தன் உடல் பொருள் ஆவி அனைத்தையும் வழங்கத் துடிக்கும் சூழல் என்பதோ, தான் அந்தக் கூட்டத்தின் தலைவன் என்பதோ அந்தக் கணத்தில் அவனுக்கு மறந்தே போய் விட்டது. பொழுது விடிந்தவுடன் போர் முரசு கொட்டச் சொல்லிச் சற்று முன்தான் ஆணையிட்டவன் அவன். யாவற்றையுமே மறந்து நின்றான் சுந்தர பாண்டியன்.

அவன் அந்தக் கணத்தில் நாட்டுத் தலைவனில்லை; போர்ப் படைத் தலைவனில்லை; அவனுடைய தலைவிக்குத் தலைவன். எவளை அவன் தன் அகத்தில் சிறையிட்டு வைத்திருந்தானோ அந்த அகத்தின் தலைவிக்குத் தலைவன்.

எத்தனையோ யுகங்களாகப் பிரிந்திருந்தவளை மீண்டும் காண்பது போன்ற பேரானந்தம் அவனுக்கு. அவனுடைய எல்லையற்ற பூரிப்பை உணர்ந்த கயல்விழி சிறிது அச்சத்துடன் அருகில் சென்றாள். அமர்ந்து உரையாடுவதற்கு அருகில் ஏதேனும் ஆசனங்கள் இருக்கின்றனவா என்று சுற்றுமுற்றும் பார்த்தாள். அவனுடைய பாசறைக் கட்டில் ஒன்றைத் தவிர வேறு இருக்கைகளைக் காணோம். பட்டுப் பஞ்சணையும், அகிற் புகையுமாகக் காட்சியளித்தது அந்தக் கூடம். ஆங்காங்கே கலிங்கமும் காஞ்சியுமாகத்

தொங்கி அது தலைவனின் பாசறை என்பதைத் தனித்துச் சுட்டிக் காட்டின.

கரங்களிரண்டையும் மெல்லப் பற்றி அவளைக் கட்டிலில் அமரச் செய்தான்.

''கயல்விழி! நான் கனவு காணவில்லையே? நீதானே இப்போது இங்கு வந்திருக்கிறாய்?'' என்று மெல்லக் கேட்டான் சுந்தர பாண்டியன்.

மறுமொழி பேசுவதற்கு அவளால் முடியவில்லை. அவளுடைய இதயத்திலிருந்து கண்ணீர் ஊற்றெடுத்துப் பொங்கி அவள் தொண்டையை அடைத்தது.

''இதோ பார்! உன்னுடைய வருகை இப்போது எப்படி இருக்கிறது தெரியுமா? திருமணத்தை அடுத்து முதன் முதலாகத் தன் தலைவனைத் தனிமையில் காண வருவாளே புது மணப் பெண், அவளைப் போலவே நீ இங்கு வந்திருக்கிறாய். இது பாசறையல்ல, கயல்விழி! நம்முடைய மணவறை! காவேரித் தென்றல், கனிந்த நிலவு, கைப்பிடியில் கயல்விழி!... என் வாழ்வில் என் கனவுகளெல்லாம் இந்தக் கணத்திலேயே நனவாகி விட்டன. வீரநரசிம்மனையும் வெற்றி கொண்டுவிடுவேன் என்று தோன்றுகிறது!''

''இளவரசே! இது போர்க்களம்; நாம் பாசறைக்குள் இருக்கிறோம்!'' என்று விம்மினாள் கயல்விழி. ''பொழுது விடிந்தால் எது மயான பூமியாகச் சுடர் விட்டு எரியப் போகிறதோ, எங்கே ஆயிரமாயிரம் உயிர்கள் ஓலமிட்டு ஓய்ந்துவிடப் போகின்றனவோ அந்த மண்ணின் மீது நாம் இப்போது இருக்கிறோம்!''

''அதனால் என்ன? எனக்கென்னவோ இந்த வாழ்க்கை என்பதே ஒரு பகலும் ஓர் இரவும் கொண்ட மிகச் சிறு பொழுது என்றுதான் தோன்றுகிறது. பகலில் ஆண்மகன் புறவாழ்வுப் போர்க்களத்தில் போராட வேண்டும். இரவில் தலைவியின் அன்புக் கரங்களில் தலை சாய்த்து இன்புற வேண்டும். — கயல்விழி! உன்னோடு ஒரு நாள் வாழ்வதற்காக நான் ஒன்பது முறை பிறவி எடுக்கவும் தயங்க மாட்டேன்!''

கயல்விழிக்குச் சித்தம் கலங்கிவிடும் போலிருந்தது.

''இந்தக் கணத்தில் உன்னோடு வாழ்ந்து, மறு கணத்தில் நான் படுகளத்தில் வீழ்ந்து மடிந்தாலும் வெற்றி வீரனாகத்தான் மடிவேன். மிகப் பெரிய சாம்ராஜ்யத்தையே வெற்றி கொண்ட பெருமையை நீ எனக்குத் தருவாய்!''

''இளவரசே! இந்த இரவும், நிலவும் நானும் சேர்ந்திருப்பதால் உங்கள் சித்தம் சிறிதளவு தடுமாறியிருக்கிறதா? போர்க்களத்தில் உள்ள தலைவருக்கு முதலில் வேண்டியது சிந்தனைத் தெளிவு ஒன்றுதான். தயைசெய்து என் பொருட்டு அதை இழந்துவிடாதீர்கள்'' என்று மன்றாடினாள் கயல்விழி.

சுந்தரபாண்டியன் மெல்ல நகைத்தான். அவனுடைய குறுநகை அவள் உயிரையே பறித்துச் செல்லும் கூற்றாக இருந்தது கயல்விழிக்கு.

''வீழ்ந்து மடிவதைப் பற்றித் தலைவராகிய தாங்கள் எளிதாகப் பேசிவிட்டீர்கள். தாங்கள் வீழ்ந்து மடிந்துவிட்டால் பிறகு என் கதி என்ன என்பதைக் கூறுங்கள். நம்முடைய குழந்தைகளான லட்சோப லட்சம் குடிமக்களின் கதி என்ன என்பதையும் சொல்லுங்கள். போரில் தலைவரை இழந்த கைம்பெண், மகனைப் பறிகொடுத்த தாய், தந்தையை இழந்த குழந்தைகள் இவர்களுக்கு நீங்கள் என்ன நீதி வழங்கப் போகிறீர்கள்? நாசமாக்கப்படும் வீடுகள், சுட்டெரிக்கப்படும் உடைமைகள், அங்கமிழந்தவர்களின் மறுவாழ்வு, இவற்றுக்கு என்ன வழி செய்யப் போகிறீர்கள்?''

''கயல்விழி!'' என்று ஆத்திரத்தோடு கத்தினான் சுந்தரபாண்டியன்.

''இது நம்முடைய விடுதலைக்காக நடக்கும் போரல்ல. கோசல சாம்ராஜ்யத்தின் படைவலிமைத் துன்பத்தை இப்போது உங்கள் நட்புறவு நாடான திருமுனைப்பாடி நாடு அநுபவித்துக் கொண்டிருக்கிறது. என் உடலில் உயிர்உள்ளவரையில் என் பாண்டிய நாடு தீப்பட்டு எரிவதையும், என் தலைவரும், மக்களும் வீழ்ந்து மடிவதையும் நான் அநுமதிக்க மாட்டேன். ஒரு போதும் இந்தப் போர் நடக்கக் கூடாது. நடந்தால் அழியப் போவது நம் மக்கள் தான்; நம் நாடுதான்!''

வேல்பட்ட வேழமெனத் துடி துடித்தான் சுந்தரபாண்டியன். கயல்விழி கோசல சாம்ராஜ்யத்தின் படை வலிமையைத் தெரிந்துகொள்ளாமல் இவ்வாறு கூற மாட்டாள். — நெடு நேரம் அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

''தவிர்ப்பதற்கு இனி வழி இல்லை'' என்று முணுமுணுத்தது அவன் வாய்.

''தவிர்க்க முடியும், தாங்கள் விரும்பினால்!'' என்று கூறிப் பாமினியின் ஓலையை எடுத்து நீட்டினாள் கயல்விழி.

அதைப் படித்தான்; பின்னர் சுட்டெரித்துவிடுபவன் போல் கயல்விழியைப் பார்த்தான். ''இதைவிடப் போரையும் அழிவையுமே நான் வரவேற்கிறேன்!'' என்றான். **(தொடரும்)**



# விஷயம் அறிந்தவர்களை எப்பொழுதும் ப்ருக் பாண்ட் தேயிலையையே விரும்பச் செய்வது எது?

தேனீர் அருந்தும் வகையிலே அநேகமாய் எல்லோரையும் திருப்தி செய்வது கடினம் என்பதைப் ப்ருக் பாண்ட் கம்பெனியார் வெகு காலத்திற்கு முன்பே அறிந்து கொண்டனர். அதாவது, சுவை, நறுமணம், சத்து ஆகியவை மிகச் சரியாயிருக்க வேண்டும். இதனாலேயே ப்ருக் பாண்ட் கடந்த 60 ஆண்டுகளுக்கு மேலாக தேயிலைகளைக் கலவன் செய்யும் கலையை பூரண ஒழுங்கிற்குக் கொண்டு வருகின்றனர்.

உங்களுக்கு முழுத் திருப்தி அளிக்கக்கூடிய கலவன் தயாரிக்கவென்றே ப்ருக் பாண்டின் தேயிலை ருசி கண்டு தரம் காண்பவர்கள் தினசரி 600 வகை தேயிலைகளை ருசி பார்க்க நேரிடுகிறது. பிறகே கலவை நிறைவாக்குவதற்காக சிலவற்றையும் நறுமணத்திற்காக மற்றவைகளையும் தேர்ந்தெடுக்கின்றனர். இவை எல்லாம் சேர்ந்ததே நீங்கள் விரும்பும் சுவையளிக்கின்ற கலவனாகிறது.

ஏனெனில், ப்ருக் பாண்ட் தேயிலை நிபுணர்கள் அபூர்வத் திறமைபடைத்தும் அனுபவத்துடனுமாக தேயிலைக் கலவன் செய்கின்றனர். இதன் மூலம் நீங்கள் விரும்பும் ப்ருக் பாண்ட் கலவனில் எப்பொழுதும் விசேஷமான ருசியும் மணமும் சித்திபேதமான சுவையும் தப்பாதிருப்பது நிச்சயம். தவிர, ப்ருக் பாண்ட் என்றும் புத்தம் புதியது, சத்திருந்தது என்பது பொருள். காரணம், அந்தக் கலவன் சுகாதார முறையில், காற்று உட்புகாத பாக்கெட்டுகளில் அடைக்கப்பட்டு நன்கு பாதுகாக்கப்படுகிறது.

உங்களைத் திருப்தி செய்வது எவ்வளவு கடினம்! என்றாலும், ப்ருக் பாண்டைத் தவிர உங்களை நன்கறிந்தவர்கள் வேறெவருமில்லை! வாழ்க்கையிலுள்ள நல்ல பொருள்களை அனுபவிக்கும் உங்களைப்போன்றவர்களுக்கென்றே ப்ருக் பாண்ட் தேயிலை கலவன் செய்கின்றனர்.




JWT/BB 2257

அட்டைப் படக் கதை



# மங்கிப் பட்டி மாப்பிள்ளை

அன்னம்

அந்த முதல் வகுப்பு வண்டியில் ஏறிஅமர்வதற்கு முன் அதன் முகப்பில் மாட்டப்பட்டிருந்த 'ரிசர்வேஷன்' சீட்டைப் பார்த்தான் கோபால். கீழ் 'பர்த்' இரண்டும் இரண்டு பெண்களுக்காக 'ரிசர்வ்' செய்யப்பட்டிருந்தது. ஒரு கணம் தயங்கிய அவன் பின்னர் மேலே ஏறித் தன் படுக்கையைத் தனக்காக ஒதுக்கப்பட்டிருந்த இடத்தில் விரித்துவிட்டுக் கீழே ஓர் ஓரமாக அமர்ந்து கொண்டான்.

ரயில் புறப்படுவதற்காக முதல் மணி அடித்த பிறகு கூட அந்தப் பெண்களில் ஒருவரும் வரவில்லை. நிம்மதியான பிரயாணம் என்று அவன் நிச்சயிக்க வேண்டிய வேளை தான். ஆனால் போர்ட்டர் ஒருவன் சாமான்களைத் தூக்கிக் கொண்டு பின்தொடர்ந்து வர இரண்டு பெண்களும் வெகு வேகமாக நடந்து வந்தனர். ஒருத்தி அந்தப் பெட்டியின் அருகே நின்று 'ரிசர்வேஷன்' கார்டைப் படித்துவிட்டு, ''இதுதான் வசந்தி!... ஏறிக் கொள்!'' என்றாள்.

இரண்டு பெண்களும் வண்டியில் ஏறிச் சாமான்களை ஒழுங்குபடுத்து முன் வண்டி புறப்பட்டு விட்டது. அவர்களுக்குத் தன்னாலான உதவியைச் செய்தான் கோபால். மணி இரவு ஏழரை மட்டுமே ஆனபடியால் ஒருவருக்கும் உறக்கம் வரவில்லை.

கடைசி நிமிஷத்தில் பொழுதுபோவதற்காக வாங்கிய பத்திரிகையை மேலாகப் புரட்டியபடியே தன் விழிகளை அந்த இரண்டு பாவைகளின் மேல் பாய விட்டான் கோபால். வசந்தி என்று அழைத்தவளின் பெயர் நளினி என்று புரிந்து கொண்டான். அவள் நல்ல சிவப்பாக ஒற்றைநாடியாக இருந்தாள். கூரிய நாசி அவள் முகத்துக்கு அழகு ஊட்டியது. மற்றவள் சற்றுப் பருமன். உயரமுமில்லை; குட்டையுமில்லை. நீண்ட கூந்தலை முன்னே இழுத்துப் போட்டுக்கொண்ட போது அது அவள் மடிமீது புரண்டது. ஆனால் மற்றவளை விட ஒரு தனி வசீகரம் அவள் முகத்தில் தெரிந்தது. அவர்கள் உடுத்தியிருந்த உடையும் உடன் வந்திருந்த பொருள்களும் அவர்கள் வசதியில் குறைந்தவர்கள் இல்லை என்பதைக் காட்டின.

நளினி என்ற பெயருள்ளவள்தான் முதலில் பேசினாள். ''வசந்தி... நானா இத்தனை நேரம் உன் வாழ்க்கையே தீர்மானமாகி

ருக்கும். இல்லையா?" என்று அவள் தன் தோழியை விசாரித்தாள்.

"நாளைக்கு என்ன? இன்றைக்கே முடிவானால்போலத்தான்!..." என்றாள் வசந்தி.

"இவ்வளவு விரைவில் நீ கல்யாணத்துக்குச் சம்மதிப்பாய் என்று நான் நினைக்கவில்லை..." என்றாள் நளினி தன் குரலில் ஆச்சரியத்தைக் காட்டியபடி.

"கடவுள் முடி போட்டு வைக்கும்போது நான் அதை மீற முடிகிறதா?" என்று மற்றவள் வேதாந்தம் பேசினாள்.

"எனக்கும் அது தெரியும். இருந்தாலும் படிப்பு முடியுமுன் உன் கல்யாணத்தை நான் எதிர்பார்க்கவில்லை. 'டிகிரி' வாங்குகிற மட்டுமாவது..."

"அப்பாவுக்குக் கூட அதுதான் இஷ்டம். அதனால் என் கைப்பிடிக்க வருகிறவருக்கு நான் மேலே படிப்பதில் எந்த வித ஆட்சேபணையும் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டபின்னரே சம்மதித்தார்."

"ஆனால் நீதான் இனி படிக்கப் போவதில்லை என்று சொன்னாயே!..."

"ஆமாம், நளினி!... படிப்பு முடிய இன்னும் இரண்டு வருஷம் இருக்கிறது. அப்புறம் 'ஹௌஸ் சர்ஜன்' 'டிரெயினிங்' வேறு..."

"இருக்கட்டுமே!..... அரைகுறையாக நிறுத்தி யாருக்கு என்ன லாபம்?... இதுவரை படித்தது...."

"வீண் என்று நீ சொல்வாய்... ஆனால் என்னமோ அம்மா, கல்யாணம் என்று ஒன்று நடந்துவிட்டால், பெண்ணின் வாழ்வு நிறைவு பெற்றதாக ஆகிவிடுகிறது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது...."

இரண்டு பெண்களும் ஆங்கிலத்தில்தான் உரையாடிக் கொண்டார்கள். அவர்கள் பேசிக்கொண்ட விதமும் வார்த்தைகளும் அழகான உச்சரிப்பும் கோபாலின் கவனத்தைக் கவர்ந்தன. அருகில் இருப்பவருக்குத் தன் ஞானத்தைக் காட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் அரைகுறையாகப் பேசப்படும் ஆங்கிலம் அல்ல.

நளினி ஒரு பெருமூச்செறிந்தாள்.

"உன் திருமணப் பத்திரிகையைப் பார்த்ததும் டாக்டர் மனோஹர் நிச்சயம் அதிர்ச்சி அடைவார்?... பாவம்!"

"அதிர்ச்சியா?... ஏன்?...." என்று கேட்டாள் வசந்தி வியப்புடன்.

"ஒன்றுமே தெரியாதவள் போல் நீ கேட்கிறாயே!... காலேஜ் ஹாஸ்டலில் எல்லாம் உன்னையும் மனோஹரையும் இணைத்துப் பேசவில்லையா?"

"இவ்வளவுதானே? ஊர் வாய்க்குப் பயப்பட முடியுமா?... மனோஹர் அப்படிப்பட்டவர் இல்லை."

"நீ சொல்வதுதான் தப்பு. என்னிடம் அவர் உன்னைப் பற்றி விசாரித்திருக்கிறார். ஆனால் நீ படிப்பு முடியட்டும் என்று காத்திருக்கிறாய் என்றுதான் நினைத்து வந்தேன்."

"அவருக்கு அப்படி ஓர் ஆசை இருந்தாலும் நான் எப்படிப் பொறுப்பாக முடியும்?... என்னுடைய மனத்தில் அப்படிப்பட்ட எண்ணம் என்றுமே இருந்ததில்லை" என்று வசந்தி மறுத்துக் கூறினாள்.

"அப்படியானால் நீ அவருடன் இவ்வளவு நெருங்கிப் பழகியிருக்கக் கூடாது!"

"என் சுபாவத்தை என்னால் மாற்றிக் கொள்ள முடியுமா?... நான் ஒருபோதும் கூண்டுக்கிளி இல்லை."

"இல்லை... காலேஜில்தான் உனக்கு வேறு பெயர் வைத்திருக்கிறார்களே!"

"என்ன பெயர்? என்னிடம் இதுவரை நீ சொல்லவேயில்லையே!..." என்று விசாரித்தாள் ஆவலுடன்.

நளினி குரலைத் தாழ்த்திக் கொண்டாள்; கோபாலின் விழிகள் அவர்களையே கவனிப்பதைப் பார்த்ததும் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

அவள் தயக்கத்தைப் புரிந்து கொண்டவள்போல் வசந்தி, "பரவாயில்லை.. சொல்!" என்றாள்.

நளினி மெதுவாகச் சொன்னாலும்கூட அவள் பேசியது அப்படியே கோபாலின் காதுகளில் விழுந்தது.

"பட்டாம்பூச்சியாம் நீ!"

எத்தனை பொருத்தமான பெயர் என்று நினைத்துக் கொண்டான் கோபால்.

வசந்தி கலகலவென்று சிரித்தாள்.

"அழகான பெயராகத்தான் அவர்கள் வைத்திருக்கிறார்கள்!"

"பெயர் அழகுதான். ஆனால் அதனடியில் கிடக்கும் பொருள் அழகில்லையே!" என்று சீறினாள் நளினி.

"எனக்கு அதில் தவறாக ஏதும் தெரியவில்லை!" என்றாள் வசந்தி மீண்டும்.

"உம்... பூவுக்குப் பூ பறக்கும் பட்டாம் பூச்சியைப் போல் ஒருவரை மாற்றி ஒருவரை மயக்குவதே உன் வேலையாகப் போயிற்று..."

"அப்படி நீ சொல்கிறாயா?"

"நான் சொல்வேனா? உன்னை எனக்குத் தெரியாதா?"

"நீ என்னைப் புரிந்துகொண்டால் அது போதும்... யார் எது வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும்...!"

"வசந்தி! உனக்குத் தெரியாததில்லை. நீ முதலில் அந்த 'டெமான்ஸ்டிரேட்டர்' காசிநாதனுடன் நெருங்கிப் பழகினாய். அப்புறம் 'கெமிஸ்ட்ரி புரொபஸர்' ஜகந்நாதன்... பிறகு 'பையோ கெமிஸ்டிரி லெக்சரர்' கண்ணன்."

"அப்புறம் நீ சொன்னாயே, இந்த டாக்டர் மனோகரன்" என்று முடித்த வசந்தி சிரித்தாள்.

"என் வேதனை உனக்கு இன்னும் புரியவில்லையே... உன் கல்யாணம் நல்லபடியாக நடக்க வேண்டுமே என்று உன்னைவிட அதிகம் வேண்டிக் கொள்பவள் நான்தான்."

"நிச்சயம் நான் கொடுத்து வைத்தவள்தான். உன்னைப் போல் ஒரு தோழி எனக்குக் கிடைத்ததும் என் அதிர்ஷ்டம்தான்."

"இந்த விவரம் எல்லாம் மங்கிப்பட்டிக்கு எட்டுவதற்கு முன்னால் உன் கல்யாணம் முடிய வேண்டும்;"

# நான் என்னுடைய ஆடைகளுக்கு

# தீப் உபயோகித்து...

சிரமமின்றியும், அடிக்கடித் துவைக்காமலும், நான் என்னுடைய எல்லாத் துணிமணிகளையும்—உல்லன், சில்க் ரேயான் மற்றும் பருத்தி— நுண்மையான சிறு பாண்டங்கள் சுகாதார நிமித்தம் உபயோகிக்கப்படும் பீங்கான் வீட்டுத்தளங்கள்... இந்தப் புதிய சிக்கனமான சிறந்த முறையில் சுத்தம் செய்கிறேன்.

நன்றாக சுத்தம் செய்யும் இரகசியம் தீப்பில்தான் இருக்கிறது என்று நான் அறிவேன்.

## ...என் கவலையை தீர்க்கிறேன்!



தீப்பினால் வெள்ளையாக்குங்கள்!
தீப்பினால் பிரகாசிக்கச் செய்யுங்கள்!

'ஆப்டிகல்' ரசாயனம்

சுத்தமான சலவை பவுடர்

சோடா கிடையாது




**கோத்ரெஜ்**

சோப்புகளில் புகழ் பெற்ற பெயர்

D1A/12-62 (18 cm. x 10 cm.) TAM

"நீ கவலைப்படாதே. கல்யாணம் நிச்சயம் நடக்கும். அப்படியே ஏதாவது தடை வந்தாலும் எதையோ எண்ணி மனத்தைக் குழப்பிக் கொள்பவர்களை மணக்காமல் இருப்பதே மேல் இல்லையா?"

வசந்தி பெரிதாகக் கொட்டாவி விட்டாள். அடுத்த சில நிமிஷங்களில் அவள் உறங்கிவிட்டாள்.

நளினியின் பார்வை கோபாலின் கையிலிருந்த புத்தகத்தின் மேல் விழுந்தது.

"நீங்கள் படிக்கப் போவதில்லை என்றால் எனக்குக் கொடுங்கள்! எனக்குத் தூக்கம் வரவில்லை" என்றாள் அவள்.

புத்தகத்தைக் கொடுத்த கோபால், நீங்கள் "எதுவரையில் பயணம்?" என்று விசாரித்து வைத்தான்.

"புதுக்கோட்டை வரை....அங்கிருந்து நான்கு மைலில் மங்கிப்பட்டி இவள் ஊர்."

"மாப்பிள்ளை வருகிறார் போலிருக்கிறது!" என்றான் கோபால்.

"ஓ!... நீங்கள் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தீர்கள் போலிருக்கிறது!" என்றாள் நளினி கலவரத்துடன்.

கோபாலுக்கு என்ன சொல்வதென்று ஒரு கணம் புரியவில்லை. "ஓர் ஊகம்தான், காதில் விழுந்த ஓரிரண்டு வார்த்தைகளை வைத்துக் கொண்டு!" என்று மழுப்பினான்.

"அதனால் என்ன?... நாங்கள் ஒன்றும் ரகசியமாகப் பேசிக் கொள்ளவில்லையே!" என்று நளினி தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

"உங்களுடைய தோழிக்கு என்னுடைய வாழ்த்துக்கள்!"

"நன்றி சார்!... கல்யாணம் எப்படியாவது நடக்க வேண்டும் என்றுதான் நானும் வேண்டிக் கொண்டிருக்கிறேன்."

"உங்கள் தோழியிடம் ஒரு குறையும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லையே!" என்றான் கோபால்.

வசந்தி தூங்குகிறாளா என்பதைப் பார்த்துக் கொண்டாள் நளினி.

"இவளிடம் யாரும் குறை காணவும் முடியாது; சொல்லவும் முடியாது. ஆனால் ரொம்பவும் 'ஸோஷியல்'... தப்பாக ஓர் எண்ணத்தை அது உண்டாக்கியிருக்கிறது. பார்க்க வருகிறவன் எதையும், யார் பேச்சையும் நம்

## தொணைக் அகராதி

**மூக்குத்தி:** ஒருவித ஓசை நயத்துடன் 'டொக்', 'டொக்'கென்று மரத்தைக் குத்தும் ஒருவகைப் பறவை; இதையே 'மரங்குத்தி' எனக் கூறுவர்.



**கும்மல்:** தொண்டையைப் பாதிக்கும் ஒருவகை நோய். அதி ஆவேசத்துடன் பேசும் அரசியல்வாதிகளை அடிக்கடி பிடிக்கவல்லது.



**ஜிமிக்கி:** ஒரு வசைச் சொல்; தங்களுக்குப் பிடிக்காத பெண்களை, "அப்பா, அவளா? 'ஜிமிக்கி' யாச்சே!" என்று மற்றப் பெண்கள் வசை பாடுவதைக் காண்க.



**தோடு:** சிறார்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்ளும் போது ஒருவரைப் பார்த்து ஒருவர், "இதோ டு!" என்றது மருவி, 'தோடு' ஆயிற்றும்.



**சங்கிலி:** ஊஞ்சல் பலகையை விட்டத்தில் மாட்டி ஆட உதவும் ஒரு சாதனம்; நாலு வடமாவது இல்லையெனில், அடம் பிடிக்கும்.



**சரடு:** எதையும் மிகைப்படுத்திப் பேசுவோரைக் குறிக்கும் ஒரு நகைச் சொல்; ஆண்களைவிடப் பெண்களே இதில் வல்லவர்கள்.



**வளை:** எலி வளை, பெருச்சாளி வளை எனப் பல வளைகள் உண்டு. எனினும், பொதுவாகச் சுவரையும், தரையையும் துளைத்து வாழும் உயிரினங்களின் இருப்பிடத்தைக் குறிக்கும்.



**கை மோதிரம்:** வீட்டில் கோபித்துக் கொண்டு வெளியே செல்வோருக்குக் கொஞ்ச நாட்கள் தாக்குப் பிடிக்க உதவும் கைப்பொருள்.



தொகுப்பாசிரியர்: **அணியழகனார்**

பாதகமாக இருக்க வேண்டும்!''

''இங்கே காலேஜில் படிக்கிறீர்கள் போலிருக்கிறது.''

''ஆமாம், ஸ்டான்லியில்தான் படிக்கிறேம்... இன்னும் இரண்டு வருஷங்கள் இருக்கிறது...''

கோபால் சற்றுத் தயங்கினான்.

''உங்களை ஒன்று கேட்கலாமா?'' என்று நளினியை மெதுவாக விசாரித்தான்.

''ஓ எஸ்!... தாராளமாக!'' என்றாள் நளினி சிரித்தபடியே.

''உங்கள் தோழிகள் கல்யாணமானவுடன் படிப்பை நிறுத்தி விடுவார்கள் போலிருக்கிறது. நீங்களும் அப்படி ஒரு சந்தர்ப்பத்தில் அதையே தான் செய்வீர்களோ?''

நளினி தலையைக் கவிழ்ந்தபடி மௌனமாக இருந்தாள்.



''யார் உன்னை இப்போ என்ன சொல்லிட்டா? ஏன் இப்படி முகாரி ராகம்...?''

''ஏதோ நான் சின்னவள், தப்பா ரெண்டு வார்த்தை சொல்லிட்டேன், அதுக்காக உங்க அம்மாவும் என்னைக் கண்டபடி பேசுகிறது சரியாங்கறேன்!''

''மன்னிக்க வேண்டும்!'' என்றான் கோபால் பதறிப் போய்.

''நோ! நோ!... நீங்கள் தவறாக ஏதும் கேட்கவில்லை. என் திருமணத்தைப் பற்றி என்னால் இப்போது நினைக்கக்கூட முடியாது. நான் படிப்பதே வேறு ஒருவர் தயவில்தான். என் குடும்பம் வாழ நான் உத்தியோகம் பார்த்துத்தான் ஆக வேண்டும். என் மிகப் பெரிய கவலை, எடுத்துக் கொண்ட காரியம் நன்றாக முடிய வேண்டுமே என்பதுதான்.''

''ஐ ஸீ!'' என்று கூறியபடி கோபால் தலையை அசைத்தான்.

''வசந்தி படிப்பது பொழுது போவதற்காகத்தான். நான் படிப்பது வயிற்றுப் பிழைப்புக்கு... இரண்டுக்கும் எத்தனையோ வித்தியாசம் இருக்கிறது இல்லையா?...''

''ஆமாம்!...'' என்று ஒப்புக் கொண்டான் கோபால்.

''நீங்கள் எதுவரை போகிறீர்கள்?'' என்று கேட்டாள் நளினி திடீரென்று.

''உங்கள் தனிமைக்குக் கடைசி வரையில் இடையூறாகத்தான் இருப்பேன்!'' என்றான் நேரடியாகப் பதில் சொல்லாமல்.

''நீங்கள் உத்தியோக விஷயமாகப் போகிறீர்களா?''

''இல்லை. சொந்த விஷயமாகத்தான்.''

''எப்பொழுது திரும்புவீர்கள்?''

''நாளை மறுநாள் நிச்சயதார்த்தம்... எனக்குத்தான்.... அங்கே அதிக நாள் தங்கினால் நன்றாக இருக்குமா?....''

''அப்படியா? மிகவும் சந்தோஷம்!''

''தாங்க்ஸ்... என்னைப் பொறுத்தவரையில் நான் மணக்க விருக்கும் பெண்ணை இங்கேயே பார்த்து விட்டேன்!!!''

''என்ன சொல்கிறீர்கள், நீங்கள்?'' என்று பதறினாள் நளினி.

''ஆமாம்! ... நானும் மங்கிப்பட்டிக்குத் தான் வருகிறேன். உங்கள் தோழிக்கு நிச்சயம் செய்யவிருக்கும் மாப்பிள்ளை நான்தான்!.''.. என்றான் அவன் அமைதியாக.

நளினிக்கு ஏற்பட்ட அதிர்ச்சியால் பேசக்கூட முடியவில்லை. ஆனால் அவனே நீண்டதொரு கொட்டாவியை விட்டபடி மேலே ஏறிப் படுத்துக்கொள்ளப் போனான்.

நளினி தன் நிதானத்தை வரவழைத்துக் கொண்டாள்.

''நாங்கள் பேசிக்கொண்டது ஏதோ விளையாட்டு... தோழிகளுக்குள் பரஸ்பரம் ஏதோ... நீங்கள் எதையும் பெரிதாக....'' என்று குழறினாள் அவள்.

''நீங்கள் நிம்மதியாக இருங்கள் மிஸ் நளினி!!.... எனக்குப் பெரியதொரு நன்மையைச் செய்தவர்கள் ஆயிற்றே, நீங்கள்!''

அவன் மேலே ஏறிப் படுத்துக்கொண்டான். நளினிக்குத்தான் உறக்கம் பிடிக்கவில்லை.

ஃ ஃ ஃ

கோபாலின் உறக்கம் கலைந்தபோது வண்டி திருச்சியில் நின்று கொண்டிருந்தது. கீழே இறங்கலாமா என்று ஒருகணம் அவன் யோசித்தான். அவன் இன்னும் உறங்குகிறான் என்ற நினைவில் கீழே நளினி பேசிக் கொண்டிருந்தாள். கண்களை மூடியபடி அந்தச் சொற்களைச் செவிமடுத்தான் கோபால்.

''என்னை மன்னித்துவிடு வசந்தி! மேலே படுத்திருப்பவர் உன்னைப் பார்க்க வரும் மாப்பிள்ளையாம்!....''

வசந்தியின் புருவங்கள் ஆச்சரியத்தால் நெளிந்து விழிகள் உயர்ந்தன.

''எதை எதையோ பேசி நான் அவர் மனத்தைக் குலைத்துவிட்டேன். உன் திருமணம் தடைப்பட்டால் அதற்கு நான்தான் காரணம்!'' என்று கூறினாள் நளினி வருத்தம் தோய்ந்த குரலில்.

''வருத்தப்படாதே, நளினி!........ திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன!....''

கதவைத் திறந்து கொண்டு 'டிரே'யில் இரண்டு 'பாட்' காபியும் மூன்று கோப்பைகளுமாகச் சிற்றுண்டிசாலையின் பணியாள் நுழைந்தான்.

''மூன்றாவது கப் அவருக்கா?'' என்று கேட்டாள் நளினி வியப்புடன்.

''பார்க்க வரும் மணமகனைக் கவனிக்காமல் இருக்க முடியுமா?...'' என்று கேட்டாள் வசந்தி குறும்புடன்.

''அவர் என்ன சொல்லுவாரோ?'' என்று பயந்தாள் நளினி.

''பரவாயில்லை, கூப்பிட்டுப் பார்!'' என்று வசந்தி வற்புறுத்தவே, மனத்தில் கலக்கத்துடன் நளினி, 'ஸார்!' ஸார்!'' என்று கூப்பிட்டாள். எப்பொழுது முதலோ விழித்திருந்த கோபால் கிழே குதித்தான்.

''குட்மார்னிங் மிஸ் நளினி! இதோ வந்து விட்டேன் வசந்தி!'' என்று அவன் டாய்லெட் அறைக்குள் போக முனைந்தான்.

''காப்பி ஆறிப் போகிறது. சீக்கிரம் வந்து விடுங்கள், அத்தான்!'' என்றாள் வசந்தி மிகுந்த உரிமையுடன்.

மயங்கிப் போய் விழவிருந்த நளினியைத் தாங்கிக் கொண்டாள் வசந்தி.

''சீ அசடு! என் படிப்பு நின்றால் உனக்கு நான் உதவ மாட்டேன் என்று ஏனடி பயந்தாய், பைத்தியம்! எத்தனை நாள் என் கல்யாணத்தை நிறுத்தி வைக்க முடியும்?'' என்று அவள் கடிந்து கொண்டாள்.

''உனக்கு எல்லாமே தெரியுமா?....'' என்றாள் நளினி கலக்கத்துடன்.

''இவர் என்னுடைய சொந்த அத்தான்! எங்கள் திருமணம் எப்போதோ தீர்மானிக்கப்பட்ட ஒரு முடிவு. நீ கேலி செய்வாய் என்றுதான் நான் இதுவரைகூட உன்னிடம் சொல்லவில்லை. அவர் என்று ஊருக்கு வருகிறார் என்று கேட்க நான் அவர் ஆபீஸுக்கு போன் செய்தேன். அப்போது...''

''ஆமாம், மிஸ் நளினி!....'' என்றபடி 'டாய்லெட்' அறையிலிருந்து முகத்தைத் துடைத்துக் கொண்டு வந்தான் கோபால். ''வசந்தி கூப்பிடுவதற்கு அரை மணி முன்பு வேறு யாரோ ஒரு பெண் என்னை டெலிபோனில் கூப்பிட்டு, வசந்தியின் நடத்தை பற்றி ஒரு புகாரியைக் கொளுத்திப் போட்டிருந்தாள். நான் அதை அவளிடம் சொன்னேன்.''

''அப்படிப் பேசியவள் யார் என்று எனக்கு முதலில் புரியவில்லை. ஊருக்குப் புறப்பட உன்னை நான் டிக்கட் 'ரிசர்வ்' செய்யச் சொன்னேன். தூத்துக்குடி எக்ஸ்பிரஸில் இடமில்லை என்று நீ போட்மெயிலில் ரிசர்வ் செய்தாய். மறுநாளே பக்கத்து அறை பாமாவுக்கு இன்று தூத்துக்குடி எக்ஸ்பிரஸில் இடம் கிடைத்தது தெரிந்தது.''



''நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரியடி! உன் கணவரும் சம்பாதிக்கிறார். நீயும் சம்பாதிக்கிறாயாமே?''

''ஆமாம்! அவர் வாங்குகிற சம்பளப் பணத்தை, அப்படியே என்னிடம் கொடுத்து விடுவார்!''

''ஆமாம்... நான் ரிசர்வ் செய்ய எழும்பூருக்கு வந்தபோது நீங்களும் அங்கு இருந்தீர்கள். என்னைப் பார்த்தீர்கள். என் பெயரையும் என் கம்பெனி விலாசத்தையும் என்னுடைய கைப்பையில் பார்த்தீர்கள். அப்போது, நீங்கள் அணிந்திருந்த கறுப்புக் கண்ணாடி இல்லாவிட்டாலும் கூட உங்களை நான் அடையாளம் கண்டுகொண்டு வசந்திக்கு ஜாடை காட்டினேன்...''

வசந்தி மேலும் தொடர்ந்தாள்.

''இந்தப் பெட்டியில் ஏறிய பிறகு வேண்டும் என்றே நான் உன் போக்குப்படியே பழகினேன். நான் தூங்கிவிட்டேன் என்று நினைத்து உன் மனத்தைத் திறந்து அவரிடம் பேசினாய். உன் படிப்பு முடிய வேண்டுமோ என்று நீ கவலைப்பட்டபோதுதான் உன்னுடைய நடத்தைக்குக் காரணம் எனக்குத் தெரிந்தது.''

நளினி வெட்கத்துடன் தலையைக் கவிழ்ந்து கொண்டாள். அவமானத்தால் முகம் குன்றிப்போயிற்று. கலங்கிய குரலில், ''என்னை மன்னித்துவிடு வசந்தி! என் சுயநலத்துக்காக உன் வாழ்க்கையோடு விளையாடத் துணிந்து விட்டேன்...'' என்றாள்.

''இல்லை, நளினி!... நீதான் என் கண்களைத் திறந்துவிட்டாய். மற்றவர்களுடன் நான் அப்படி சகஜமாகப் பழகியிருக்கக் கூடாதுதான். இப்போது அத்தானாக இல்லாமல் வேறு யாராவது இருந்தால் தப்பாகத்தானே நினைப்பார்கள்!'' என்று மறுத்தாள் வசந்தி.

நளினி தன்னுடைய சாமான்களை எடுத்து ஒழுங்குபடுத்தினாள். தன் பெட்டியை மூடிய படி, ''இப்படியே திரும்பிப் போக மட்டும் எனக்கு அனுமதி கொடுங்கள்!'' என்று வேண்டினாள் அவள்.

''நன்றாகப் போனாய் போ! அநேகமாக அடுத்த புதன்கிழமை திருப்பரங்குன்றத்தில் எங்கள் கல்யாணம் இருக்கும். வெள்ளிக் கிழமை நான் மறுபடியும் காலேஜுக்கு வரும்போது நீ என்னுடன் திரும்பலாம்!''

''நீயா? மறுபடியும் கல்லூரிக்கா?''

''அரைகுறையாக வைத்தியம் கற்றுக் கொண்டால் ஆயிரம் பேருக்குத்தானே ஆபத்து? நான் இரண்டாயிரம் பேரைத் தீர்க்க ஆசைப்படுகிறேன்!'' என்றாள் வசந்தி.

கோபாலின் சிரிப்போடு நளினியின் சிறு நகையும் சேர்ந்து கொண்டது!



அதி உன்னதமான நிறைவூட்டுவது **அமுல்** வெண்ணெய்...






இராஜ போகமான உணவை வழங்குங்கள் உங்கள் குடும்பத்தினருக்கு — பிடித்தமான தின் பண்டம் ஒன்றின்மீது சிறிது அமுல் வெண்ணெய் வைத்தால் கன கச்சிதமாக அமைந்துவிடும். அமுல் வெண்ணெயின் சுவை சேரும்போது உணவுகள் சுவையோங்கிவிடும் — அதோடு, உடம்புக்கு நல்ல போஷாக்குச் சத்துக்கள் அதிக அளவில் உங்களுக்குக் கிடைக்கவும் செய்யும். பண்ணைப் புதுமை மாறாமல் ஐந்தே மணி நேரத்தில் பால் பண்டத்திலிருந்து வெண்ணெய்ப் பொட்டணத்தை அடையும் ஏடுதிரண்ட, தூய்மையான புத்தம்புது அமுல் வெண்ணெயிலே, தெம்பு தரும் சூரிய ஒளி வைட்டமின்களான ஏ, டி இரண்டும் செறிந்துள்ளன: வளரும் குழந்தைகளுக்கு இன்றியமையாத சத்துக்கள் அவை.

பண்ணைப் புதுமை மாறாத
சுத்தமான பால்-ஆடை...

# அமுல்
## வெண்ணெய்

அமுல் உங்கள்
உணவுக்கு மதிப்பி
டமுடியாத உயர்
பான் போஷாக்கின்
பயனை அளிக்கிறது.

கெய்ரா கோ-ஆபரேட்டிவ் தயாரிப்பு — விலைமதிப்பற்றது

கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆபரேட்டிவ் மில்க் ப்ரட்யூஸர்ஸ் யூனியன் லிட்., ஆனந்த்



CBKMP-38 TAM

# பாட்டியின் கிரிக்கெட் விமரிசனம்

கிரிக்கெட் பந்தயம் நம் ஊருக்கு வரப் போகிறது என்று தெரிந்தவுடனேயே, இரண்டு மாதங்கள் முன்னரே வீட்டில் ஆலோசனை சபை கூடிற்று; பரிசீலனைக் கமிட்டி நிறுவப்பட்டது. 'ஹோம் டீம்' தேர்ந்தெடுக்கப்பட்டது. முதலில் கிரிக்கெட் மாட்ச் பார்ப்பதில் யார் யார் பங்கு கொள்வது என்று பரிசீலனை செய்யப்பட்டது. இதற்கு முன் நடந்த கிரிக்கெட் மாட்சுகள் நடந்த போது (பார்த்து) பங்கு கொண்டவர்கள் ஜாபிதா தயாரிக்கப்பட்டது. மாட்சு இதுவரையில் பார்க்காதவர்களின் ஜாபிதாவும் தயாரிக்கப்பட்டது. சென்ற பத்து ஆண்டுகளில் நடைபெற்ற மாட்சுகளில் சிலவற்றையும், பலவற்றையும் பார்த்தும், பார்க்கத் தவறினவர்கள் ஜாபிதாவும் தயாரிக்கப்பட்டது. இவற்றிலிருந்து, வயது, அனுபவம், திறமை, சகிப்புத் தன்மை, தேக பலம், ஆர்வம், கிரிக்கெட் ஞானம் இவையெல்லாம் ஒவ்வொருவருக்கும் எந்த அளவில் இருக்கின்றன என்று தீர்மானித்துப் பிறகு ஒவ்வொரு வகையாரிலும், முக்கியமான அம்சங்கள் பொருந்தியவர்களைத் தேர்ந்தெடுக்கப்பட்டது. இப்படிக் குடும்பத்தில் 12 புள்ளிகளும், இரண்டு ரிசர்வ்களும் தெரிந்தெடுக்கப்பட்டார்கள். மொத்தம் ஆறு டிக்கெட் வாங்குவதென்று முதலில் தீர்மானிக்கப்பட்டது. பொக்கிஷதாராகிய அம்மாவின் கோரிக்கைப்படி இந்த எண் தீர்மானிக்கப்பட்டது. இதனால் சண்டையும் பூசலும், மனத்தாங்கலும், அழுகையும், துவேஷமும் வளருவதைப் பார்த்து டிக்கெட் எண் எட்டுக்கு உயர்த்தப்பட்டது. அப்படியும் தள்ளுபடி சிறுபான்மையோரின் குரல்கள் பலமாக இருந்ததால், அண்ணாவும் நானும் எங்கள் டிக்கெட்டுகளைக் குடும்ப பட்ஜெட்டில் சேர்க்காமல் நாங்கள் 'பைப் பணத்திலிருந்து' -- அதாவது எங்கள் சொந்தக்கைப் பணத்திலிருந்து — டிக்





கெட்டு வாங்கிக் கொள்வதாகச் சம்மதிக்கவே எங்கள் குடும்ப கிரிக்கெட் கோஷ்டியில் ஒருவாறு அமைதி ஏற்பட்டது. தெரிந்தெடுக்கப்பட்ட ஜாபிதாவில் சேர்க்கப்பட்டவர்கள் பின்வருமாறு:

அப்பா : காப்டன்
அம்மா : வைஸ் காப்டன்.
அண்ணா : ஆட்டக்காரர்.
பங்கஜம்: அண்ணாவின் மனைவி.
கப்பு : சின்னண்ணா.
கப்பி : சின்னண்ணாவின் மனைவி ஊரில் இல்லாததால் பெயர் ஜாபிதாவில் சேர்க்கப்படவில்லை.
நான் : பிரம்மசாரி
சர்க்க: தங்கை—கலாசாலை மாணவி.
பிச்சு : தம்பி—எஸ்.எஸ்.எல்.ஸி. கோட்.
நச்சு : தம்பி—பத்தாவது ஸ்டாண்டர்டு.
கிச்சு : அண்ணாவின் மைத்துனன்—ஊரிலிருந்து மாட்சுக்காகவே வந்தவன்.
கமி (மாற்றுப் பெயர் கமலா): அண்ணாவின் மைத்துனி — கிச்சுவுடன் ஊரிலிருந்து வந்தவள்.
மணி : அம்மாவின் தம்பி.
ரங்கு மாமா : 'சமையல் கலைஞர். (இவர்கள் ரகசியமாகச் சாப்பாட்டுச் சாமான்கள் எடுத்து வர.)
ராமு : அப்பாவின் அந்தரங்கக் காரியதரிசி.

ஆலோசனை சபை ஜாபிதாவை வெளியிட்டதும், இரண்டு (கூக்) குரல்கள் கிளம்பின...சர்க்கவும் பிச்சுவும், "பாட்டியை விட்டு விட்டீர்களே! பாட்டி இல்லாமல் என்ன கிரிக்கெட் வேண்டியிருக்கு!" என்று கூப்பாடு போட்டனர். நச்சுவும் நானும் அதை முழு மனத்துடன் ஆமோதித்தோம். அப்பா, அம்மா, அண்ணா எல்லோருமே, "ஆமாம்! பருப்பில்லாமல் கல்யாணமா? பாட்டி வராவிட்டால் நமக்குக் கிரிக்கெட் மாட்சில் கத்துவதற்குத் தெம்பு கொடுப்பது யார்?" என்று ஒரு குரலாகப் பாட்டியை ஜாபிதாவில் 'ஸ்பெஷல்' அல்லது தனிப் பகுதியில் சேர்த்தோம். எங்கள் கோஷ்டிக்குப் பாட்டியையே மானேஜராக ஏகோபித்து நியமித்தோம்.

யாருக்காவது அவளது கிரிக்கெட் அநுபவத்தில் சந்தேகம் வந்துவிடப் போகிறதே என்று பாட்டியும், "என்னடாப்பா! பாட்டின்னா கிரிக்கெட்டு தெரியாதுன்னு பார்த்தீங்களா! எங்க நாளிலே, அவர் (காலஞ் சென்ற தாத்தாவைக் குறிப்பிட்டு) எப்ப பார்த்தாலும் கிரிக்கெட் பைத்தியம் பிடிச்சு அலைவார். அவருக்கு நான் காலங்காத்தாலே எட்டு மணிக்கே சாப்பாடு பண்ணிப் போட்டு, டிபனும் பண்ணி, பிளாஸ்கிலே காப்பியும் கொடுத்து அனுப்புவேன். அதைச் சாப்பிட்ட தெம்போடு அவர் போடும் கத்தலிலே கிரிக்கட் பந்து ஆகாசத்துலேபறந்து காம் வாயிலே விழுமாம்! அப்பல்லாம் சேப்பாக்கத்துலே நடக்கும் ஆட்டம்! அந்தக் காலத்துலே பாலியா, பட்டாச்சாரி ஆடின மாதிரி இப்ப யாரு ஆடப் போறா!" என்றாள்.

"ஏன், பாட்டி! பாலியா, பட்டாச்சாரி எல்லாம் பார்த்திருக்கிறாயா நீ?" என்று கிச்சு கிண்டலாகக் கேட்டான்.

"வேணது பார்த்திருக்கேன்! அவாள்ளாம் ஆட்டம் ஆனதும் நம்ம வீட்டுலே வந்து காப்பி டிபன் சாப்பிடாமே போக மாட்டாளே! தாத்தா அவாளைத் தினம் கூட்

# 'கிறுக்கட்டான்'





டிண்டு வந்திடுவார்...'' என்ற பழைய கதையைச் சொல்லத் தொடங்கினதும் பாட்டிக்குக் கிரிக்கெட்டில் உள்ள ஆர்வம், அநுபவம் பற்றி நாங்கள் யாரும் வாய் திறக்கவில்லை.

* * *

பாட்டியின் தலைமையின் கீழ் எங்கள் கிரிக்கெட் விஜயத்துக்குத் திட்டம் திறமையாக வகுக்கப்பட்டது. மாட்ச் நடக்கும் நாலு நாட்களிலும் ஒவ்வொரு நாளும் என்ன ஸ்வீட், என்ன ஸேவரி, நடுவிலே கொரிப்பதற்கு என்ன வகைகள், தாகசாந்திக்கு என்று என்னென்ன பானங்கள் முதலிய 'மெனு' திட்டம் முன்கூட்டியே வகுக்கப்பட்டது. குடும்பத்தில் யாருக்கும் மனக்குறை இல்லாமல், ஒவ்வொருவருக்குப் பிடிக்கும் அயிட்டங்கள் ஒவ்வொரு நாள் ஜாபிதாவில் சேர்க்கப்பட்டது. பிச்சுவுக்குப் பாதாம் ஹல்வா மேல் உயிர்; முதல் நாள் பட்டியலில் அது சேர்க்கப்பட்டது. சச்சுவுக்கு உருளைக் கிழங்கு போண்டா பிடிக்கும்..... அது இரண்டாவது நாள் ஸேவரி.... நச்சுவுக்குக் கார பகோடா மேல் அபாரப் பிரியம். அது மூன்றாவது நாள்.... இப்படி எல்லா வகைத் தின்பண்டங்களும் அந்த நாலு நாளும் தினசரி ஜாபிதாவில் சேர்ந்தன.

* * *

மாட்ச் தினம் நெருங்கிற்று. எல்லோரும் பரபரப்புடன் இருந்தோம். பாட்டி மட்டும் படௌடி நவாப்பு விக்கெட்டுமுன் அசங்காமல் அயராமல் நின்றது போல் மிகவும் அமைதியாகவும் தன்னம்பிக்கையுடனும் தனது பொறுப்புக்களில் ஈடுபட்டிருந்தாள்.

முதல் நாள் மாட்சுக்கு நாங்கள் எல்லோரும் காலையிலேயே சீக்கிரம் சாப்பிட்டு விட்டு ஒன்பது மணிக்குக் கிளம்பினோம். பாட்டி, டிபன்பாக்ஸ் கூடை, பைகள், பிளாஸ்குகளை நிரப்பிக் கொண்டு சித்தமாக இருந்தாள்.

பாட்டி தலைமையில் எங்கள் 'ஹோம் டீம்' நேரு ஸ்டேடியத்தை ஒன்பதரை மணிக்கு அடைந்தது. இடம் தேடிப் பிடித்துக் கொண்டு உட்கார அரைமணியாயிற்று. பாட்டியை நடுநாயகமாக உட்கார வைத்துக் கொண்டோம். டிபன்செட் வகையறாக்களுக்கும் இடம் பிடித்து வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

* * *

பத்தேகால் மணிக்கு ஸ்டேடியத்தில் ஆட்டக்காரத் தலைவர்கள் வந்ததும் கர கோஷ ஆரவாரத்தில் நாங்கள் கலந்து கொண்டோம். பாட்டி டிபன் தட்டையும் கரண்டியையும் கையில் வைத்துக் கொண்டு வெற்றி முழக்கம் செய்தாள்.

காசைச் சுண்டுகிறார்கள்; பூவா தலையா? தலை.... நம் இந்திய கோஷ்டி முதலில் மட்டை பிடிக்கிறார்கள்! மட்டையும் கையுமாக முதல் இரண்டு மட்டைவரும் ஆட்ட அரங்குக்கு வர, கலகலப்பு ஏற்பட்டது.

''ஆ! பௌண்டரி'' என்று சச்சு ஒரு குதி குதித்தாள்...

''பவுண்டரியா! சரி! நீ ஏன் அப்படிக் குதிக்கிறே! இந்தா சச்சு இந்த ஜூஸைக் கொஞ்சம் சாப்பிடு'' என்று ஆரஞ்சு ரசத்தைத் தன் செல்லப் பேத்திக்கு அவள் புட்டியிலிருந்து டம்ளரில் கொட்டிக் கொடுத்தாள்...

''இரு பாட்டி! ஜூஸும் வேணும், ஒண்ணும் வேணாம்.. ஆட்டம் ஜோரா இருக்கு'' என்று சச்சு மறுக்கவே, ''அது என்ன கண்ணராவியோ! இந்தப் பொண்ணு ஆறுலும் தலைக்கு மிஞ்சிக் குதிக்கிறது'' என்று சொல்லிக் கொண்டே அந்த ஆரஞ்சு ரசத்தை முறையே பிச்சு, கிச்சு எல்லோருக்கும் நீட்டினாள். அவர்களும் மறுக்கவே, அது கடைசியில் என் வாயில் விழுந்தது.

'போல்டு' என்ற வானைப் பிளக்கும் சத்தம் எழும்பவே, பாட்டி, கொண்டு வந்திருந்த போளியை எடுத்து விநியோகம் செய்தாள்.

''எல். பி. டபிள்யூ'' என்ற பலமாகக் கூச்சல் எழும்போது கைமுறுக்கை எடுத்து வாரிக் கொடுத்தாள்.

''ஸ்டம்ப்ட்'' என்று கோஷங்கள் கிளம்பக் காராசேவையின் சேவை ஆரம்பமாயிற்று.

ஒரு தரம் மட்டைக்காரர் பந்தை ஓங்கி அடிக்க அது உயரக் கிளம்பவே, இரண்டு மூன்று 'வயலாளிகள்' கையை நீட்டிக் கொண்டு பந்து கீழே விழுந்து அடிபடாமல் காப்பாற்றப் போனார்கள். ஆனால் அந்தப் பந்து அவர்கள் கைகளை மீறிப் பூமாதேவியிடம் சரண் புகுந்தது. ''ஹா!'' என்ற அங்கலாய்ப்புக் குரல்கள் ஸ்டேடியத்தை நிரப்பின.

அதே சமயம் பாட்டி பையிலிருந்து ஆரஞ்சுப் பழங்களை எடுத்து வீச நாங்கள் ஆளுக்கு ஒன்று கீழே விடாமல் 'காட்ச்' பிடித்துக் கொண்டோம். தவறி விட்டவைகளைப் பக்கத்திலும் கீழ் வரிசையிலும் இருந்தவர்கள் கவ்விப் பிடித்துக் கொண்டனர்.

''பாட்டியம்மா! இங்கே ஒரு முறுக்கு போடுங்கம்மா!''

''பாட்டி, ஆரஞ்சு ப்ளீஸ்!''

''நாங்க பாட்டியில்லாத அனாதைங்க அம்மா! தாயே! எங்களையும் கொஞ்சம் கவனியுங்க தாயே!''

இப்படிப் பல திசைகளிலிருந்தும் மேலிருந்தும், கீழிருந்தும் குரல்கள் இறைஞ்சின. பாட்டியும் சளைக்காமல் எல்லோரையும் தன் பேரன் பேத்திகள் ஆக்கிக் கொண்டு அவர்களைத் திருப்தி செய்தாள். முதல் நாள் ஆட்டம் முடிவதற்குள் அந்தக் கிரிக்கெட் ஸ்டேடியத்தில் அன்று ஆட்டக்காரர்களைவிட மேலான மதிப்பையும் கவனத்தையும் ரசிகர்களிடமிருந்து பாட்டி தட்டிக் கொண்டு விட்டாள்.

முதல் நாள் முடிவுகளைச் சுருக்கமாகச் சொல்லப் போனால், பின்வருமாறு:



உங்கள் மகன்
அவனது வருங்காலத்திற்கு
உரியதைப்
பெறவேண்டும்!

அதனை

பணச் சேமிப்பு

மூலம் அவனுக்கென்று
உறுதிப் படுத்துங்கள்




சேவிங்ஸ் பாங்க் அக்கௌண்டை எங்கள் பாங்கில் ஆரம்பியுங்கள்

சேர்மன் — ஜெனரல் மானேஜர் — தலைமை ஆபீஸ்: கல்கத்தா

---



# பார்கோ

கேஸ் மாண்டில்கள்



சிறந்த ஒளிக்கும்
நீடித்த சேவைக்கும்

தயாரிப்பவர்கள்:

பார்கோ மாண்டில் ப்ராடக்ட்ஸ்

343-B,

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதைத் அறிவிக்கின்றன.



**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டமில்லாததுதான்.



> **இளமையில் வழுக்கை**
> இக்கிலேயை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-2, சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

# Silvikrin

**சில்விக்ரீன்—கேச ஆரோக்கியத்துக்கான வழி**




### ப்யூர் சில்விக்ரீன்

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

---

### சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.







# வரிச்சுமையின்

புதுப் பிரசுரங்கள்

உலகத்திலேயே அதிகமான வரிச்சுமையைத் தாங்கும் நாடு இந்தியாதான் என்கிறார் திரு என். ஏ. பால்கிவாலா. பம்பாய் மாநிலத்தைச் சேர்ந்த பிரபல வருமான வரி வழக்கறிஞர் இவர். வரிமுறைகள் சம்பந்தமாகத் தமது அநுபவத்தினாலும் ஆராய்ச்சியினாலும் பல நுட்பங்களைக் கண்டறிந்த பின்னரே தக்க ஆதாரங்களுடன் இவ்வாறு அவர் தீர்ப்புச் சொல்லுகிறார்.

சொல்லுவதை மிகுந்த சொற்சுவையுடனும் பொருட்சுவையுடனும் அழகாகச் சொல்கிறார். அழுத்தம் திருத்தமாகவும் சொல்கிறார். அவருடைய (The Highest Taxed Nation) என்ற நூல் நேர்முக வரிகளைப் பற்றியேதான் முழுக்க முழுக்க விவரிக்கிறது. இப்போதுள்ள வரிகளில் காணும் குறைபாடுகள்—நிச்சயமற்ற தன்மை; புரியாத அளவு சிக்கலிருந் தன்மை; அதிகக் கடுமையினால் வரி கொடாமல் டிமிக்கி கொடுக்க மக்களைத் தூண்டும் தன்மை; தனிப்பட்ட அதிகாரிகளின் இஷ்டப்படி விவரணம் செய்யும் தன்மையினால் அநீதிக்கு இடமளிப்பது, ஆகியவை. இதுதான் புத்தக அமைப்புக்கு அஸ்திவாரம்.

இந்த அம்சங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியே முந்திய ஆண்டு பட்ஜெட்களில் விதிக்கப்பட்ட வரிகளையும் திருத்தங்களையும் கொண்டு கண்ணாடி போல் விளக்கியிருக்கிறார். நான்கு ஆண்டுகளில் 68 புதுப் புகுத்தல்களும் 51 திருத்தங்களும், 22 அடித்தல்களும் வருமானவரிச் சட்டங்களில் செய்யப்பட்டால், வரி கொடுப்பவர்கள் என்ன பாடுபடுவார்கள் என்று எடுத்துக் காட்டியிருக்கிறார் திரு பால்கிவாலா.

தனி நபர் வருமான வரி சம்பந்தப்பட்ட மட்டில் வருமான வரி, உபரி வரி, அதிக வருமான உபரி வரி, உழைப்பில்லாத சம்பாத்தியத்தின் மீது விசேஷ உபரி வரி, உயர் வருமான உபரி வரி, இப்படி ஒன்பது வரிகள் அடுக்கடுக்காக ஒன்றன் மீது ஒன்றாக விதிக்கப்பட்டால், கணக்குப் போடுவது கூடப் பெரும் தொல்லையாகத்தான் போகிறது என்று உதாரணங்கள் மூலம் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

அதிகமான பங்குதாரர்கள் அக்கறையுள்ள கம்பெனிக்குத் தனி வரி விகிதம், அக்கறையில்லாத கம்பெனிகளுக்குத் தனி வரி விகிதம் என்ற பாகுபாட்டினால், குறிப்பிட்ட கம்பெனி எந்த இனத்தைச் சேர்ந்தது என்று நிச்சயிப்பதற்கே பல ஆண்டுகள் கழிகின்றன. இதற்கு எடுத்துக்காட்டாக ஒரு வழக்கு கீழ்க் கோர்ட்டுக்கும் மேல் கோர்ட்டுக்குமாக 1943ம் ஆண்டிலிருந்து 1964ம் ஆண்டுவரையில் இன்னும் ஊசலாடிக் கொண்டிருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்.

தனிப்பட்டவர்கள் வருமான வரி விஷயத்தில் மற்ற நாடுகளில் அமுலிலிருக்கும் விகிதங்களை ஒத்திட்டு, புள்ளி விவரங்கள் மூலம், நமது நாட்டில் வருமான வரி செல்வ வரி இவற்றின் கடுமையினால் மக்கள் கஷ்டப்படுவது போல் வேறு எந்த நாட்டிலும்—கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டு, முதலாளித்துவ நாட்டிலும் — காண முடியாது என்கிறார் திரு பால்கிவாலா.

தொழிற் கம்பெனிகள், தொழிலதிபர்கள், பணக்காரர்கள், மாதச் சம்பளக்காரர்கள்—இப்படிப் பல வர்க்கத்தினர்களும் வரிக் கொடுமை பற்றி அடிக்கடி சொல்லத்தான் சொல்கிறார்கள். ஆனால் அரசாங்கத்தின் காதில்தான் விழுவதில்லை. காதில் விழுந்தாலும் விழாவிட்டாலும் வரி விகிதங்கள் கடுமையானால் மக்கள் மனம் முறிந்து எந்த லாபகரமான தொழில் நடவடிக்கைகளிலும் அவர்களுக்கு உற்சாகம் பிறக்காது என்ற உண்மையை எத்தனை தடவைகள் வேண்டுமானாலும் சொல்லத் தகும். இதைத் திரு பால்கிவாலா திறமையுடன் சுருக்கமாகவும், அணித்தரமாகவும் செய்திருக்கிறார்கள்.

பிரசுரம்: P. C. Manaktala & Sons, Private Ltd.; 6, Fair Field, Road No. 4, Churchgate, Bombay-1. Price: Rs. 5.

## இளங்கொடியாள்

சிலப்பதிகாரக் காவியத்தில் கற்புக்கரசி கண்ணகியைப் போலவே, கற்புக்கு அணியாகத் திகழ்ந்த மாதவியின் சிற்றன்னையான கலைக் கொடியாள் என்பவளுக்கு இளங்கொடியாள் என்று ஒரு மகள். அவளைச் சேர மன்னனுக்குப் பரிசாக அளிக்கிறான் சோழ மன்னன். சேர மன்னன் அவளை வாழ்க்கைத் துணையாக்கிக் கொள்கிறான். வரலாற்றில் மறைந்து போன சம்பவத்தை இந்நூலில் நாடகமாக ஆக்கித் தரப்பட்டிருக்கிறது. பாடல்களும் இயற்றியிருக்கிறார் ஆசிரியர். மன்னன் உயிர் ஆபத்தில் சிக்கியபோது தன் உயிரைக் கொடுத்து அவன் உயிரைக் காத்த வீராங்கனை இளங்கொடியாள். 'சரித்திரமும் தரித்திரமும் சாகாதவை' என்னும் பழமொழியைக் குறிப்பிட்டு இச்சரித்திரக் கதையை உலகத்தின் கவனத்துக்குக் கொண்டு வருவதே தமது நோக்கம் என்கிறார் ஆசிரியர்.

கிடைக்குமிடம்: சிதம்பர நடராசசுந்தரம், 5, கிழமாட வீதி, சென்னை—4; விலை: ரூ. 2.50.


...நீ அந்தப் பெண்ணிடம் அவர்கள் அடிபட்டதைப்பற்றிச் சொல்வதைக் கேட்க நம்பமுடியவில்லை. அவளை அறையில் வைத்துப் பூட்டி விட்டேன். இரண்டு பேருக்கும் கட்டுப்போட்டு முடக்கியாயிற்று! கொஞ்சநாள் படுத்துக்கொண்டே இருக்கட்டும். எழுந்திருக்க விடாதே. நான் அந்தப் பெண் பேச ஆரம்பித்ததும் டெலிபோன் கம்பியைக் கத்திரித்துவிட்டேன். நாம் இன்றே கிளம்பிப்போய்விட வேண்டும்... வா வக்கீலிடம் போகலாம்.


...நான் இதுவரை சொன்ன விஷயங்களிலிருந்து நமது ஆபத்தான நிலைமையைப்பற்றித் தெரிந்து கொண்டிருப்பீர்கள். நம்மைக் காப்பாற்றிக்கொள்ள ஒரே வழி பையன்கள், யோகம் எல்லோரையும் ஒழிக்க வேண்டியதுதான். அவர்களை நான் மறைத்து வைத்திருக்கிறேன். நீங்கள் இந்தக் கடிதத்திலும், செக்கிலும் கையெழுத்திட்டாக வேண்டும். இல்லாவிட்டால்...


தவறாக எண்ணிக்கொள்ளாதீர்கள். நம் எல்லோருடைய நன்மையையும் உத்தேசித்து முன் ஜாக்கிரதையாக இப்படிச் செய்ய வேண்டியிருக்கிறது. நாங்கள் பாங்கில் உங்கள் கணக்கிலிருந்து வாங்கும் பணத்தைப் பத்திரமாக வைத்திருக்கிறோம்.
கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று படித்துப்பார்த்து விடுகிறேனே!


சாவகாசமாகப் படித்துக்கொள்ளலாம்.
என் தங்கமல்லவா! நான் சொன்னபடி செய்யுங்கள். கையெழுத்திட்டால் நான் உங்களோடேயே தங்கியிருப்பேன்....




# இளமையிற் கல்

சமையல் பயிலும் சிறுமி, அவளே வருங்காலக் குடும்பத் தலைவி. கற்றுக்கொடுங்களேன் ஒரு நாள். எவ்வளவு விரைவில் கற்றுக்கொடுக்கிறீர்களோ அவ்வளவுக்கு அவ்வளவு மேல்.

உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் இப்போதே கற்றுக்கொடுக்க வேண்டிய மற்றொரு பாடம், பற்களையும் ஈறுகளையும் ஒழுங்கு தவறாமல் பராமரிப்பதே. பற்சிதைவும் ஈறு நோய்களும் வராமல் பாதுகாத்த உங்கள் உதவிக்காகப் பிற்காலத்திலே நன்றி செலுத்துவார்கள் அவர்கள்.

போர்ஹான்ஸ் பற்பசைகொண்டு பற்களையும் ஈறுகளையும் பாதுகாத்துக்கொள்ள இன்றே பழக்குங்கள் உங்கள் செல்வங்களை. அது ஒரு பல் வைத்தியரின் தயாரிப்பாகும்; ஈறுகளின் நலனுக்காக டாக்டர் போர்ஹான்ஸ் தயாரித்த விசேஷத் துவர் மருந்துகள் அடங்கிய பற்பசை உலகில் இதுவொன்றே. தவறாமல் உபயோகித்துவந்தால் பளிச்சென்ற வெண் பற்களையும் பாங்கான உறுதிவாய்ந்த ஈறுகளையும் பெற்று விளங்குவது திண்ணம்.

"CARE OF THE TEETH AND GUMS" என்ற சிறிய வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெற, தபால் செலவுக்காக 10 பைசா தபால் வில்லைகளை இணைத்து எழுதவும்: மானேர்ஸ் டென்டல் அட்வைசரி பியூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்




**COUPON**

Please send me a copy of the booklet
"CARE OF THE TEETH AND GUMS"

Name ........................................

Address ........................................

........................................

# [illegible]

343 பட்டதாரிகள் ஒருமனதாக ஆங்கிலமே ஆட்சி மொழியாக வேண்டும் என்று பிரதமருக்கு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள்.
அவர்களுடைய அறிக்கை இதோ:

ஐயா,

நமது சக்தியை உறிஞ்சிக் கொண்டிருந்த ஆட்சி மொழிப் பிரச்னையை அழக் குழி தோண்டிப் புதைத்து, மக்களுக்கு ஜன நாயகத்திலும் அதன் மேலான லட்சியங்களி லும் புது நம்பிக்கையூட்ட முதலமைச்சர்கள் மகாநாடு உதவுமெனப் பெருநம்பிக்கை கொண்டிருந்தோம். ஆனால் மேற்படி மகா நாடு எங்களை அடியோடு ஏமாற்றி விட்டது என்பதைப் பெருவருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். மகாநாட்டினால் புதிய விளைவு எதுவுமே ஏற்படவில்லை. ஹிந்திக்கு ஆங்கிலம் பக்கவாத்தியம் வாசிக்க வேண்டும் என்ற பழைய பாட்டே மீண்டும் அற்புதமான 'ஐக்கிய பாவத்துடன்' கோஷ்டிகானம் செய் யப்பட்டது.

மக்கள் சபையில் பிரதமர் பேசிய பேச்சு, நிலைமையில் முன்னேற்றம் காண உதவ வில்லை; அது குட்டையை மேலும் குழப்பி யுள்ளது. 'அடிப்படை முடிவுகளைக் குறித்து எவ்வித மாறுதலும் செய்வதற்கில்லை; அவற் றின் மீதேதான்' எந்த ஸ்திரமான கொள்கை யும் உருவாக்கப்படும்' என்று ஒரு முக்கிய மான விஷயத்தைப் பிரதமர் கூறியிருக்கிறார். இது சற்றும் வலிவற்ற வாதம். ஆங்கிலம் கால வெள்ளத்தை வென்று, தன் தகுதியை அற்புதமான முறையில் நிரூபித்துக் கொண் டுள்ளது. தேசம் முழுவதும் ஏற்கும் வகை யில் ஹிந்தியை அபிவிருத்தி செய்ய வேண்டு மென்று அரசியல் சாஸனத்தின் 351வது பிரிவு விசேஷக் கட்டளை இட்டபோதிலும் நடைமுறையில் மேற்படி திட்டத்தை அமு லாக்கவில்லை. 'எஸ்பரான்டோ' என்ற கற்பித மொழியை ஐரோப்பாவின் பொது மொழி யாக்குவதற்காகச் செய்த முயற்சி எப்படித் தோல்வியுற்றதோ அதேபோல் இந்தியாவி லும் ஹிந்திப் பரிசோதனை தோற்றுவிட்டது.

இயற்கையான காரணங்களை யொட்டியே மொழிகள் பிறந்து வளர்கின்றன. கால வரம்பு கட்டி அதற்குள் ஒரு மொழியைப் பெருமைப்படுத்த முயல்வது இயற்கையான பரிணும விதிக்கே புறம்பானது. அரசியல் சாஸனத்தின் விசேஷக் கட்டளை தோல்வி யுற்ற பின் யூனியன் ஆட்சி மொழி குறித்து சாஸனத்தில் உள்ள மற்ற அம்சங்களைப் பிடி வாதமாக அமுல் செய்வதற்கு எந்த நியாய மும் இல்லை. அரசியல் சாஸனம் அளிக்கும் அடிப்படை உரிமைகளை இத்தகைய திணிப் புத் திட்டம் தகர்க்கிறது. சுருங்கச் சொன் ஞல் ஆட்சி மொழி பற்றிய சாஸன ஷரத் துக்கள் பத்தாம் பசலியாகி விட்டன. இப் போது பிரச்னையில் முன்னேற்றம் காண வேண்டுமெனில் சாஸனத்தை மாற்றியாக வேண்டும்.

பிரச்னைக்குப் பரிகாரமாகக் கருதப்படும் இருமொழித் திட்டம் தவறான வழியில் இட்டுச் செல்லும் மாயத் திட்டமாகும். மேலும் குழப்பத்தில்தான் கொண்டு விடும். ஸ்ரீ நேருஜியின் வாக்குறுதிகளை வின்னியாசம் செய்துகொண்டிருப்பதாலும் பயன் இல்லை. அவருடைய பிரத்தியேகக் கருத்தாகக் கருதப் படும் மேற்படி வாக்குறுதியைப் பல விதங் களில் வியாக்கியானம் செய்து கொள்ள முடியும்.

ஆட்சிமொழி ஆவதற்குச் சுலபமான தகுதி பெற்றுள்ள ஹிந்தியை நிர்ப்பந்தமின்றிப் பிர சாரம் செய்ய முடியாது. ஆட்சி நிர்வாக வட்டாரங்கள் யாவற்றிலும் ஆங்கிலமே வெகு பரவலாக வழங்கப்படுகிறது. எனவே பிரச்னை நிர்வாக மொழியைப் பற்றியதே என்பதை நாம் மறக்காதிருந்தால் ஆங்கிலத் தின் அவசியத்தை நன்கு உணர்வோம். நமக்கு ஐக்கியம் தந்தது ஆங்கிலம். அறிவு தந்தது ஆங்கிலம்; முன்னேற்றம் தந்தது ஆங்கிலம்; நமது வருங்காலத்துடன் தொடர்பு கொள்ள சமஸ்கிருதம் எவ்வாறு உதவு கிறதோ அதே போல உலக மகா சமுதாயத் துடன் நாம் தொடர்பு கொள்ள உதவும் ஒரே மொழி ஆங்கிலம்.

இந்த முக்கியமான அம்சங்களையும் தேச ஒற்றுமையையும் மனத்தில் வைத்து, இந் தியன் இன்ஸ்டிட்யூட் ஆப் ஸயன்ஸைச் சேர்ந்த நாங்கள் ஆங்கிலமே இந்திய யூனி யனின் ஒரே ஆட்சி மொழியாகக் கால வரை யறை யின்றி நீடிப்பதற்குச் சாஸன மாற்றம் செய்ய வேண்டும் என்று மீண்டும் மீண்டும் கோருகிறோம்.

வி. மித்ரா, கே. கேசவன்,
மற்றும் 341 பட்டதாரிகள்

இந்தி பேசாத மக்களின் விருப்பத்துக்கெதி ராக இந்தியைத் திணிக்க மாட்டோம் என்று டில்லி அரசியலார் கூறுகின்றனர்; ஆனும் உண்மையில் நடப்பதென்ன? மத்திய அர சாங்க அலுவலகங்களில் இந்தி திணிக்கப்பட்டு விட்டது. இரயில்வே தபால் தந்தி இலாகாக் களில் அதற்கு முக்கியத்துவம் கொடுக்கப்படு கிறது. இரயில்வே நிலையங்களின் பெயரையும் இந்தியிலேயே எழுதுகிறார்கள்; இந்திப் பரீட்சையில் தேர்ச்சி பெற்றால்தான் வேலை உயர்வுகள் கிடைக்கும் என்று சுற்றறிக் கைகள் விடப்பட்டு விட்டன. அதனும் டெல்லியின் கூற்றை நாம் எப்படி ஒப்புக் கொள்ள முடியும்?

தர்மபுரி
13-2-65

இராசு நஞ்சப்பா



## கூலி மிகக் கேட்கவில்லை!

''பச்சையப்பாஸ் காலேஜண்டை போறதுக்கு என்னப்பா கேட்கிறே?''

''நான் இன்னா சாமி கேக்கறது? உங்களுக்குத் தெரியாதா, நீங்க குடுக்கிறதைக் குடுங்க!''

''சரி, இந்தப் பெட்டி — படுக்கையை எடுத்துக்கிட்டுப் போய் வண்டியிலே வை!''

''வேறே ஒண்ணும் இல்லீங்களா?''

''இல்லே, நான்தான்!''

''சரி, ஏறுங்க!''

''அடேயப்பா! இன்னா கனம் கனக்குது இந்தப் பொட்டி? கொஞ்சம் முன்னாலே தள்ளி உக்காருங்க!''

''சரி!''

''என்னமோ, மாடு கணக்கா இஸ்திக்கினு போறேன். கண்டதைப் பாத்துக் கூலி குடுங்க!''

''ஆரம்பிச்சுட்டியா, இப்பவே!''

''தப்பா நெனைக்காதீங்க சாமி, நான் அந்த மாதிரி ஆளு இல்லே!''

''சரி, சரி; போ!''

......

''என்னப்பா, காலேஜ் வாசல்லியே வண்டியை நிறுத்தறே?''

''நீங்கதானே சொன்னீங்க?''

''நான் ஒரு அடையாளத்துக்குச் சொன்னேன். நீ இன்னும் கொஞ்ச தூரம் போய் அந்த ரோட்டுக் காத் திருப்பு!''

''இது வேறயா? சொல்றது ஒரு எடம், போறது இன்னொரு இடமா! எய்யா இந்தக் கேப்மாரிப் பொய்யு உங்களுக்கு? இதுக்குத்தான் கோட்டும் சூட்டும் வாண்டிரிஸிலிருந்து வாடகைக்கு வாங்கிப் போட்டுக்கினு வந்துட்டியா?''

''ஏய், ஏய்! அதிகமாகப் பேசாதே! ஹாரிங்டன் ரோடுன்னு தெரியுமா உனக்கு? அதுக்குத்தான் இந்தக் காலேஜின் பேரைச் சொன்னேன். போதுமப்பா உன் சவாரி, நீ வண்டியை நிறுத்து! இதோ வந்துவிட்டது என்னுடைய வீடு!''

''ஏன், எருமை கணக்கா வண்டிலேதான் உக்காந்துக்கிட்டு இரேன்! நல்ல ஜோக்காயிதே, உன் ஜோக்கு! யாருக்கப்பா கை குடுக்கிறே நீ, எனக்கா குடுக்கிறே? அடங்க சோதா: எனக்குத் தெரியாத ரோடு இந்த மெட்ராஸிலே இருக்குதா?.... எடுப்பேன், கூலியை?''

''சும்மா பேசாதே! இந்தா, ஒரு ரூபாய்க்கு இரண்டு ரூபாயாவே தரேன், சத்தம் போடாமல் எடுத்துக்கிட்டுப் போ!''

''போட்டா முழுங்கிடுவியா? ரொம்பத் தாராளம் இவுரு! சென்ட்ரல்லேருந்து இம்மாந்தூரம் வந்ததுக்குக் குடுக்கிறான் பாரு கூலி! இந்தாய்யா, நீயே வெச்சுக்கோ!''

''இன்னும் என்ன வேணுங்கிறே? சொல்லித் தொலை!''

''சொன்னாத்தான் தெரியும்போல இது! இந்தப் பொட்டிக்கே நீ இன்னும் மூணு ரூவா குடுக்கணும் தெரியுமா?''

''சரி, வாங்கிக்க; ஆளை விடு!''

''விடாம கெட்டியாப் புடிச்சுக்கினு இருக்கப் போறேன். போய்யா, சரிதான்!''

.........

''பாத்துக்கினியா நைனா, வாத்தியாரு வேலையெ? அங்கியே கூலி பேசிக்கோன்னு சொன்னியே, அப்படிப்பேசியிருந்தா மூணு ரூவாயும் குடுத்துட்டு, மூக்காலு வேறே போட்டுக்கிட்டு உள்ளே ஓடுவாரு. இவன்? ஒரு ரூவாயில்லே குடுத்திருப்பான், ஒரு ரூவா!''

பெருமையடித்துக் கொண்டவர்:
ரிக்ஷாவாலா

அந்தப் பெருமையில் பங்குகொண்டவர்:
சக ரிக்ஷாவாலா

தகவல்: ஒரு பாதசாரி



# பளபளப்பான செந்நிறத் தரைகள்

## — உங்கள் வீட்டிற்குப் பெருமை!

சிவப்பு கார்டினல் பாலிஷ் மூலம் உங்கள் வீட்டுத் தரைகளை செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும்படி வைத்துக் கொள்ளுங்கள். மினுமினுப்பற்ற சாதாரண கல்தரையானாலும் சிமிட்டித் தரையானாலும் பளபளப்பைக் கொடுப்பதில் சிவப்பு 'கார்டினல் பாலிஷ்' அற்புதமாக வேலை செய்யக்கூடியது.

கணநேரத்தில் மங்கலான தரையை புதியதோர் செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும்படி செய்துவிடும்! உங்கள் வீட்டின் அழகான தரையை அழகாகவும் பளபளப்பாகவும் வைத்துக் கொள்ள இன்றே. சிவப்பு கார்டினல் தரைப் பாலிஷை உபயோகியுங்கள்!




# சிவப்பு கார்டினல் பாலிஷ்

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

# சினிமாப் பார்த்து



"ஏய்! கமலி, பேபி, மீனு, சரஸா! எல்லோரும் வாங்கோ, தலையைப் பின்னி விடுகிறேன். அப்பா அபூர்வமா சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகிறாராம்" என்று நான் குரல் கொடுத்தேன்.

சாதாரணமாகக் கரடியாக அரை மணி நேரம் கத்தினாலும் எதிரே உட்கார்ந்துகொண்டு ஏனென்று கேட்காத என் புத்திரிகள் இப்போது 'சினிமா' என்ற மந்திரச் சொல்லைக் கேட்டதும் நொடியில் ஆஜராகி விட்டார்கள்.

கிரிக்கெட் மட்டையைச் சுழற்றியபடியே நந்துவும், சுந்துவும் வந்தார்கள்.

"டேய், சுந்து! நாங்களெல்லாம் சினிமாவுக்குப் போகப் போகிறோமே...!" மீனு உச்ச ஸ்தாயியில் கத்தினாள்.

பின்னிக்கொண்டிருந்த அவள் தலையில் நான் 'நறுக்'கென்று ஒரு குட்டுக் குட்டினேன். "ஏண்டி, கலகப் பிரியா! அவாள்ளாம் புருஷப் பசங்க... தனியா ஆயிரம் படத்துக்குப் போறா.....உங்களை அழைத்துக் கொண்டு போகணும்னு அப்பாகிட்டே சண்டை பிடிச்சுச் சம்மதிக்க வச்சு நான் கிளம்பினா...அவாளையும் ஏன் கிளப்பறே நீ...?" என்று கடிந்து கொண்டேன்.

"ஆஹா! சினிமாவா!... ஜாலி" என்று கத்திக் கொண்டே என் புத்திர சிகாமணிகள் நந்துவும், சுந்துவும் கிரிக்கெட் மட்டையை வீசி



## என். பத்மாவதி

எறிந்து விட்டு அறையின் உள்ளே பாய்ந்து ஓடிப் பீரோவைத் திறந்தனர்— தங்கள் உடைகளை மாற்றிக் கொள்ளத்தான்.

"அடேய்...! நீங்களெல்லாம் இன்னொருநாள் சினிமா போவேளாம்...." நான் இரைந்து கத்தினேன்.

"அப்பாகன்னு கமலியும், பேபியும் மாத்திரம் என்ன உசத்தியாம்...? அவா போகாட்டாக்க நாங்களும் போகலே..." நந்து. சுந்து இருவரும் ஏககாலத்தில் கத்தினார்கள்.

"என்ன? எல்லோரும் எங்கே கிளம்பறாப் போலே....?" – என் மூத்த மகன் சந்துரு நுழைந்தான்.

"ஏண்டா சந்துரு! நீ வீட்டில் இருப்பயா? இன்னிக்கு நாங்களெல்லாம் சினிமாவுக்குப் போறோம்...." – நான் மெதுவாக ஆரம்பித்தேன்.

"அடடா....! எந்தப் படம்? 'பகங்கன்றும் பாவையுமா?' நானும் அதே படத்துக்குப் போகணுமென்று துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறேன். என்ன செய்வது?

# ஓட்டசனம்



இன்னிக்குக் கடைசி நாளாச்சே!... இன்னொரு நாள் போகலாமென்றாலும் முடியாது'' என்று வருத்தம் தெரிவித்தான் சந்துரு.

''ஏன் லக்ஷ்மி! சரளா, மீனுவுக்கெல்லாம் என்ன புரியும்? அவாள்ளாம் எதுக்கு?'' இவர் ஆட்சேபணைக் குரல் எழுப்ப, மீனு ''ஊம்ம்...நானும் வருவேன் சினிமாவுக்கு'' என்று சிணுங்கினாள்.

''ஆமாம்.... ஒரு நாய்க்குட்டியையும் அழைச்சண்டு வா'' – இவர் சிடுசிடுத்தார்.

''ஏம்மா... நிஜம்மாவா?.... நாய்க்குட்டி எதுக்கு?'' என்று மீனு கேட்டாள்.

''நாய்க்குட்டியை எடுத்துண்டு வந்தால்தான் உன்னை உள்ளே விடுவானாம்!'' – நந்து நீட்டி முழக்கினான்.

இதற்குள் கைக்குழந்தை முரளி தூளியில் வீறிட்டு அலற, ''அடியே! கமலி! சீக்கிரம் வந்து குழந்தையை எடு. நான் முகத்தை அலம்பிண்டு வந்துடறேன்'' என்று நான் பின்பக்கம் நகர்ந்தேன்.

''போம்மா.... என் சில்க் தாவணியெல்லாம் பாழாயிடும்... நான் மாட்டேன்'' என்று கமலி முணுமுணுத்தாள்.

இதற்குள்...இவருடைய அத்தைக் கிழவி வந்து கொண்டே...? ''என்டியம்மா இவ்வளவு பேர் இருந்துமா...குழந்தையை அழவிடறேள்!'' என்று கேட்டுக்கொண்டே குழந்தையை எடுத்தாள்.

இவர் மெள்ள என் அருகில் வந்து ''குழந்தையை அத்தைகிட்டே விட்டு விட்டுப் போகலாமே....என்ன சொல்றே?'' என்றார்.

''போறுமே...உங்க அத்தைக்குக் கண்ணும் தெரியாது; காதும் கேட்காது. அவர் கிட்டே குழந்தையை எப்படி நம்பி விடறது?''



இதற்குள் நந்து அங்கு வந்து ''ஏன் அத்தைப் பாட்டி, நீ சினிமாவுக்குக் கிளம்பலே? நேரமாச்சே! வேறே புடவை எடுத்துக் கட்டிக்கோ!'' என்று உரக்கக் கத்தினான்.

நான் அவனை முறைத்துப் பார்த்தேன். குறும்புக்கார நந்து ஓடிவிட்டான். அத்தை, ''என்டியம்மா! சினிமாவுக்கா? முன்னாலே என்கிட்டே சொல்லக் கூடாது?...இப்போ நேரமாயிடலியோ?'' என்று கூறிக்கொண்டு கண்களை இடுக்கி கடிகாரத்தை நிமிர்ந்து பார்த்தாள்.

நான் மெதுவாக... ''இல்லே அத்தை...இது புராணப் படம் இல்லே... வந்து சமூகப் படம்.... உங்களுக்குப் பிடிக்காதேன்னு...'' என்று இழுத்தேன்.

''நன்னாயிருக்கு... 'பகங்கன்றும் பாவையும்'தானே? ரொம்ப நன்னாயிருக்குன்னு சேஷிப் பாட்டி சொன்னா....ஒரு நொடியிலே வந்துடறேன், இரு....'' என்று சொல்லிக் குழந்தையைப் பாயில் கிடத்தினாள். மூலையிலிருந்த கொம்பைத் தாவி எடுத்து உயரத்தில் கொடியில் உலர்த்தியிருந்த புட

சேலையைத் தள்ளி எடுத்துக் கொண்டு உடுத்திக் கொள்ளப் போய்விட்டாள்.

ஒருவழியாக எல்லோரும் சீவிச் சிங்காரித்துக்கொண்டு காரில் ஏறினோம்.

பாதி வழியைத் தாண்டியிருப்போம்; நான் ''ஐயய்யோ'' என்று குரல் கொடுக்க, அவர் என்னமோ ஏதோவென்று பயந்து சட்டென்று பிரேக் போட, முன்சீட்டில் இருந்தவர்கள் கார் கண்ணாடியில் தலையை முட்டிக் கொண்டு நெற்றியைத் தேய்த்துவிட, பின்னிருந்த பெண்குட்டிகள் ஒரு குட்டிக்கரணம் போட்டுத் தட்டுத் தடுமாறி எழுந்தனர்.

''குழந்தைக்குப் புட்டியில் பால் விட்டு, அதை மேஜை மேல் மறந்து வைத்துவிட்டு வந்துவிட்டேன்'' என்றதும் எல்லோரும் ஒரேயடியாக முணுமுணுக்கத் தொடங்கினர்.

கமலி, ''எப்பவுமே உனக்கு மறதி தானம்மா... படம் ஆரம்பித்துவிட்டால், எனக்குப் பார்க்கவே பிடிக்காது....'' என்று குறைப்பட்டாள்.

''படம் ஆரம்பித்திருந்தால் உன்னை பஸ் ஏற்றி வீட்டுக்கு அனுப்ப நான் இருக்கேன். பயப்படாதே'' என்று நந்து அபயமளித்தான்.

''கார் ஓட்டும்போது ஐயய்யோன்னு கத்தாதேன்னு இதோடு ஆயிரம் தடவை சொல்லியாச்சு.... யார் காருக்கடியில் எனக்குத் தெரியாமல் மாட்டிக் கொண்டார்களோ என்று நான் ஒரு நிமிடம் கலங்கிப் போய் விட்டேன்'' என்று கோபித்தபடியே இவர் காரைத் திருப்பினார்.

பால் புட்டியை எடுக்க நான் கதவைத் திறக்க, பேபி, ''இரும்மா நான் நொடியில் எடுத்துண்டு வரேன்'' என்று உள்ளே ஓடினாள்.

அத்தை காரில் இருந்தபடியே ''அடியே பேபி! அப்படியே கொஞ்சம் விபூதி கொண்டாடீ... சந்தியா காலம்... ஜபம் செய்யற நேரம்'' என்று குரல் கொடுத்தாள்.

''ஜபம் செய்யணும்னு வீட்டிலேயே இருக்கப்படாதோ?'' — சந்துரு முணுமுணுத்தது அத்தையின் காதில் விழவில்லை.

திரும்பவும் எல்லோரும் காரில் ஏற, கார் ஆடி அசைந்து கொண்டு கிளம்பியது.

''ஏண்டீ! விபூதி என்னமோ வாசனை வீசறதே!''—அத்தை சந்தேகத்தோடு கேட்டாள்.

''ஆமாம் பாட்டி! அது சென்ட் போட்ட விபூதி'' என்று கூறிய பேபி மெதுவாக என் காதின் பக்கம் குனிந்து ''விபூதி சம்புடம் கிடைக்கவில்லையம்மா. அவசரத்துக்கு தோணவில்லை என்று கொஞ்சம் பவுடரைக் கையில் கொட்டிக் கொண்டு வந்தேன்'' என்றாள்.

''கிருஷ்ணா! ராமா! அப்பனே!'' என்று சொல்லிக் கொண்டு அத்தை சென்ட் விபூதியை நெற்றியில் பூசிக் கொண்டாள். இதற்குள் விஷயம் எல்லோருக்கும் பரவவே கசமுசவென்று சிரிப்பொலி கிளம்பியது.

ஒரு வழியாகத் தியேட்டரை அடைந்தோம். நாங்கள் வந்து சேர்ந்த நேரத்துக்குக் கீழ்வகுப்பு டிக்கெட் எல்லாம் தீர்ந்துவிட்டது. திரும்பி வீட்டுக்குப் போக முடியாதென்று குழந்தைகள் அனைவரும் ஸ்டிரைக் செய்தார்கள். அதற்குத் தூண்டுகோலாக இருந்த நானும் அத்தையும் சாதுபோல் முகத்தை வைத்துக் கொண்டு ஒதுங்கி நின்றோம்.

முப்பது காகித ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்துப் பத்துக் காகித டிக்கட்டுகளை வாங்க வேண்டியிருந்தது; குழந்தைகள் கொம்மாளமிட்டவாறு கொட்டகைக்குள் நுழைந்தனர். படம் ஆரம்பித்து விட்டது; கமலியின் முணுமுணுப்புத் தொடங்கி விட்டது. ''நான் அப்பவே சொன்னேன்; படம் ஆரம்பித்து ஒரு சீன்கூட மிஸ் பண்ணக் கூடாதுன்னு'' என்று என் காதைத் துளைக்க ஆரம்பித்தாள்.

''நான்தான் அம்மா கிட்டே.... நான் தான் அப்பாகிட்டே.... எனக்கு இந்த ஓட்டை நாற்காலி வேண்டாம்...அம்மா! பிஸ்கட் கொடும்மா...அம்மா லைட் போடச் சொல் அம்மா... இருட்டா இருக்கே...'' இவ்வளவு கசமுசப்பையும் அடக்கி நான் ஒரு வழியாக என் நாற்காலியில் உட்காரும் போது படம் கால்வாசிக்கு மேல் ஓடிவிட்டது.

''அப்பாடி! ஒரு வழியாகப் படம் பார்க்கப் போகிறோம்'' என்ற திருப்தியுடன் பெருமூச்சு விட்டேன். திரையில் காட்சியளித்த கதா நாயகியைப் பார்த்துப் புன்னகை பூத்தேன்.

''ஐயோ!'' — மீனு வீறிட்டு அலறினாள். ''என் காலைப் பேபி செருப்புக் காலால் மிதிச்சுட்டாள். ரத்தம் வருது... ஓ...ஓ!''

பேபி சட்டென்று அவள் வாயைத் தன் கையால் பொத்தினாள். பின்னால் உட்கார்ந்திருந்தவர்கள் 'கசமுச' வென்று தங்கள் வெறுப்பைக் காட்ட ஆரம்பித்தனர்.

''கழுதை! கொஞ்ச நேரம் கத்தாமல் இருக்கக் கூடாது?'' நான் ரகசியமாகக் கையைக் கீழே நுழைத்து மீனுவின் துடையில் திருகினேன்.

''ஐய்யய்யோ !'' சரளா வீறிட்டாள்; ''என் துடைம்மா..மீனு துடைன்னு நினைச்சு என்னை....'' மீனு தான் தப்பிவிட்ட சந்தோஷத்தில் சிரிக்க, அழ வாயைத் திறந்த சரளாவுக்கு இரண்டு பிஸ்கத்துகள் வாயில் விழ அவள் தன் திருவாயை மூடினாள்.

''சேச்சே! குழந்தைகளை அழைத்துக் கொண்டு வந்து சினிமாப் பார்க்காட்டா என்ன!'' — எனக்குப் பின்னால் உட்கார்ந்திருந்தவள் காது கேட்க முணுமுணுத்தாள்.

இவ்வளவு நேரம் என் மடியில் தூங்கிக் கொண்டிருந்த முரளி மெதுவாகக் கண் திறந்து எழுந்து உட்கார்ந்தான். இருட்டில் தன் கண்களை உருட்டி உருட்டி விழித்தான்.

''அம்மா!... குழந்தை! கொஞ்சம் கீழே இறங்கிக்கறயா?'' — பின்னாலிருந்து குரல் கேட்டது கேலியாக.

மீனு தனக்குப் படம் தெரியவில்லை என்று நாற்காலியின் கைமேல் ஏறி உட்கார்ந்திருந்தாள். பற்களை நறநறவென்று கடித்தபடியே எழுந்து அவளைப் பலவந்தமாகக் கீழே இறக்கி உட்கார வைத்தேன்.

இந்த அமர்க்களத்தில் பார்த்தால் குழந்தை முரளியைக் காணவில்லை. இருட்டில் கீழே குனிந்து தேடினேன். மெதுவாக 'ஏன்னா! குழந்தையைக் காணவில்லையே? உங்க கிட்ட வந்தானா?'' — நான் கேட்டது அவர் காதில் விழுந்தால்தானே !

அதற்குள் நாலைந்து வரிசைகளுக்கு முன்னால் கசமுசப்பும், நாற்காலி உருளுவதும் 'குழந்தை குழந்தை' என்ற ஒலியும் கேட்டன.

# மக்ளீன்ஸ்

## உபயோகித்து அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்!



### இவ்விதம் சோதியுங்கள்



1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.




**மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த பற்களை வெண்மையாக்குகிறது!**



# எட்டியிராத மைலோட்டத்தை எட்டியுள்ள டயர்.

## இதனை உருவாக்குவது

# பயர்ஸ்டோன் ஸூப்-ர்-டஃப்

### கூடுதலான மைலோட்டத் திறன்படைத்த அற்புத ரப்பர்

இதோ இன்றே கிடைத்துவிட்டது காலேவ டயர்! பாதுகாப்பாக மோட்டாரோட்டுவதற்கென புரட்சிகரமான டிரெட் அமைப்புக்கொண்ட பயர்ஸ்டோன் நியூ டீலக்ஸ் சாம்பியன். அதோடு மட்டுமல்ல, அதிகப்படி செலவு ஏதுமின்றியே உபரி மைலோட்டம் கிடைப்பதற்கென ஸூப்-ர்-டஃப் என்ற அற்புத ரப்பரினால் தயாரிக்கப்பட்ட டயர் இது. தவிர, ஸூப்-ர்-டஃப் அதிக உறுதி வாய்ந்தது ஆதலால் பஞ்சர், தேய்வு, பிளவு எதுவும் நேரிடாமல் தாக்குப்பிடிக்கும் திண்மை உள்ளது.

**Firestone** பயர்ஸ்டோன் நியூ டீலக்ஸ் சாம்பியன்

இருட்டில் முரளி நாற்காலிகளுக்கடியில் தவழ்ந்து கொண்டே போய் வழிமறித்துக் கொண்டிருந்த ஒருவருடைய கால்களைப் பிராண்டியிருக்கிறான். அவர் துள்ளி எழுந்து கத்த, டோர்கீப்பர் ஓடி வந்து டார்ச் லைட் அடிக்க, ''யாருது அம்மா குழந்தை? இப்படியா குழந்தை போன இடம் கூடத் தெரியாமல் படம் பார்ப்பார்கள்?'' — ஓர் ஆள் எரிச்சலுடன் குரல் கொடுத்துக் கொண்டே குழந்தையைத் தூக்கினான். இருட்டில் தட்டுத் தடுமாறிச் சென்று குழந்தையைப் பெற்றுக் கொண்டேன்.

''அப்பாடா!'' என்று ஆயாசத்துடன் நான் நாற்காலியில் வந்து உட்காருவதற்கும் 'இடைவேளை' என்ற அறிவிப்புடன் தியேட்டரில் விளக்குப் போடுவதற்கும் சரியாக இருந்தது.

வெளிச்சத்தில் தாங்கள்தான் காணாமற் போன குழந்தையின் குடும்பத்தினர் என்று காட்டிக் கொள்ள வெட்கப்பட்டவர்கள் போல, இவர், நந்து, சுந்து, சந்துரு அனைவரும் எழுந்து வெளியே கம்பி நீட்டி விட்டனர்! அவர்கள் கொடுத்து வைத்தவர்கள்!

வெளிச்சத்தில் சுற்றியிருந்தவர்கள் அனைவரும் என்னையும், குழந்தைகளையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கேலியாகச் சிரித்துக் காதைக் கடித்து ரகசியம் பேசினார்கள்.

அத்தை தன் வெண்கலக் குரலில், ''அடியே லட்சுமி! வீட்டுக்குப் போனதும் முதல்லே எல்லோருக்கும் சுத்திப் போடு. துக்கிரிக் கண்கள் முறைத்து முறைத்துப் பார்க்கறதுகள்'' என்று ஆரம்பித்தாள்.

இடைவேளையில் சவீஸ்வரன் வந்தான் — சோடா கலருடன். ''அம்மா தாகம், கலர் வாங்கித் தா'' சரளா ஆரம்பிக்க, மீனு பின் பாட்டுப் பாடினாள். என் கண்டனம் ஒன்றும் பலிக்கவில்லை.

இவ்வளவு நேரம் எது சொன்னாலும் காதில் ஏறாமல் படம் பார்த்துக்கொண்டிருந்த நந்து, சந்துருவுக்குச் சோடா கலர் என்ற வார்த்தை நன்றாகக் காதில் விழுந்தது. பிறகு தொண்டையிலும் விழுந்தது.

''எனக்குத்தான் முதலில்'' என்று சரளாவும் மீனுவும் ஒரு பாட்டிலைப் பிடித்து இழுக்க அது நழுவிக் கீழே விழுந்து 'ஜல்' லென்ற சத்தத்துடன் உடைந்தது. என் பொறுமைக்கும் எல்லை உண்டல்லவா?

''தடிக் கழுதை! சின்னவளுடன் உனக்கென்னடி போட்டி?'' என்று ஆத்திரத்துடன் ஓங்கி ஒன்று போட்டேன் மீனுவின் முதுகில்.

''ச்சேச்சே! இன்னிக்கு என்ன வேளை பார்த்துச் சினிமாவுக்குக் கிளம்பினேனோ!'' என்று நான் படபடக்க, ''நீங்க ஏம்மா வேளை பார்க்கணும்...? நாங்க அல்லவா வேளை பார்த்துப் புறப்பட்டிருக்கணும்... அந்தச் சினிமாப் பார்க்கக் காசைக் கொட்டிக் கொடுத்துவிட்டு இப்ப இந்தச் சினிமா இல்லே பார்க்கிறோம்'' என்று பின் சீட்டுக்காரி குரல் கொடுக்க முணுமுணுப்புடன் பின்னால் இருந்த எல்லோரும் அவளை ஆமோதித்தனர்.

''ராமச்சந்திரா! இருட்டில் இன்னும் யார் யார் காலில் கண்ணாடிச் சில்லு குத்தி அவஸ்தைப்படுமோ!'' என்று நான் முணுமுணுக்க, சோடாக்காரன் ''அது ஒண்ணும் குத்தாதும்மா'' என்று பாட்டிலுக்கும் இரட்டிப்புத் தொகை வசூலித்தபடியே நகர்ந்தான்.

பெருமூச்சுடன் திரையில் கண்களை ஓட விட்டேன். யாரோ கோவிலில் நின்று பாடி பூஜை செய்து கொண்டிருந்தார்.

''அரஹரா! அப்பனே! வேல் முருகா!'' அத்தை படபடவென்று கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

எனக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. ''என்ன அத்தை இது? சினிமாங்கிறது மறந்து போச்சா?''

''அம்மா! பசிக்கிறது அம்மா! தூக்கம் வரதம்மா வீட்டுக்குப் போகலாம்'' என்று சரளா சிணுங்க ஆரம்பித்தாள்.

''தூங்கித் தொலை. சிறிது நேரம் உன் தொணதொணப்பில்லாமல் சினிமாப் பார்க்கிறேன்'' என்று சொல்லிக் காலடியிலுள்ள இடத்தில் துண்டை விரித்துப் போட்டேன். சரளா சுருண்டு படுத்துவிட்டாள்.

இவ்வளவு நேரம் தூங்கியும் எழுந்தும் தொந்தரவு செய்யாமல் சமர்த்தாக இருந்த முரளியை மெச்சினேன். ஆனால் என் கண்ணே பட்டுவிட்டதா என்ன? தூங்கிக் கொண்டிருந்த முரளி வீலென்று அலறிக்கொண்டு எழுந்தான்.

''பசிபோலிருக்கு. பால் கொடேண்டி''— இது அத்தையின் குரல்.

சட்டென்று குனிந்து பிளாஸ்டிக் கூடையில் கைவிட்டுப் பால் பாட்டிலைத் தேடினேன். கிடைத்தால்தானே! திகைத்து இருட்டில் கண்களை விரித்துப் பார்த்தபோது சுகமான நித்திரையுடன் சரளா பால் பாட்டிலை உறிஞ்சிக் காலி செய்து கொண்டிருப்பது தெரிந்தது. சவலைக் குழந்தையான அவளுக்குப் பால் பாட்டில் மோகம் இன்னும் தீரவில்லை.

வேறு வழியில்லாமல் முரளியைத் தூக்கிக் கொண்டு வெளியே வந்தேன். என் தவிப்பை உணர்ந்தது போல் மணி கண கணவென்று அடித்தது. உள்ளிருந்து 'ஜனகண மன' பாட்டின் சத்தம் இலேசாகக் காதில் விழுந்தது.

கதவுகள் திறந்தன. ஜனப் பிரளயம் வெளியே பாய்ந்தது. முரளியின் அழுகை 'கப்'பென்று நின்றது. என் அருகில் வந்து நின்ற என் குடும்பத்தினரைப் பார்த்துச் சிரித்தான். தூங்கிக் கொண்டிருந்த சரளாவைப் பெரிய மனத்துடன் சந்துரு சுமந்து வந்தான்.

''அட சமத்துக் கண்ணு! அப்பாகிட்டே வரயா?'' என்று அவர் இப்பொழுதுதான் வாயைத் திறந்து கேட்டார்.

''என்ன லட்சுமி! படம் ரொம்ப நன்னாயிருக்கும்னு சொன்னாயே என்று தமிழ்ப் படமாயிருந்தாலும் பரவாயில்லை என்று வந்தேன். படம் படுபோர்... சுத்த மோசம்'' என்று விமரிசித்த அவரை விழித்துப் பார்த்தேன் ஆத்திரத்துடன்.

பின் என்ன செய்வது? நான் சினிமாப் பார்த்த லட்சணத்துக்கு வாயைத் திறந்து விமரிசனம் செய்ய வேறு வேண்டுமா?

“உன் உயிருக்கு ஆபத்து நேரும். ஜாக்கிரதை!” என்று டொனால்டுக்கு டெலிபோன் செய்தி வரும். “சம்பந்தமில்லாத விஷயத்தில் தலையிட்டால் அது சேவப்படும்!” என்று அநாமதேயக் கடிதம் கிடைக்கும். இதையெல்லாம் கண்டு டொனால்ட் அஞ்சவில்லை. ஊர் மக்களுக்கு உண்மையை எடுத்துச் சொல்ல வேண்டும். அரசாங்க அதிகாரிகள் லஞ்ச ஊழல்களில் சிக்கினாலும் அவற்றை வெட்ட வெளிச்சமாக்கி மக்கள் நலனைக் காக்க வேண்டும். இதுவே பத்திரிகைத் தர்மம் என்று லட்சிய நோக்கத்துடன் ‘டெய்லி நியூஸ்’ என்ற தமது பத்திரிகையை நடத்தி வந்தார் டொனால்ட் மெல்லட்.

அமெரிக்காவின் ஒஹியோ மாகாணத்தைச் சேர்ந்த காண்டன் என்ற ஊரிலே

இந்தக் குற்றங்களைச் செய்யும் கூட்டம் மிகவும் சக்தி வாய்ந்தது. உங்கள் உயிருக்கே ஆபத்து நிகழலாம். இப்படி எதிர்ப்புப் பிரசாரம் செய்வது உசிதமல்ல” என்றனர்கள்.

மக்களிலும் பயம் காரணமாக மிகக் குறைந்த அளவினரே அவருக்கு ஆதரவு தந்தனர். இருந்தாலும் டொனால்ட் தனது கடமையிலிருந்தும் இம்மியும் வழுவவில்லை; எதிர்ப்பைக் குறைத்துக் கொள்ளவுமில்லை. தலையங்கங்களும் விவரமான முறையில் உண்மைக் கதைகளும் அந்தக் குண்டர்கள் கூட்டத்தைப் பற்றி எழுதினார்.

ஒன்றன்பின் ஒன்றாகப் பல தடவைகளில் அவர் உயிர் போய் விடும் என்று எச்சரிக்கப்பட்டார். டொனால்டுக்குக் குண்டர்கள் கூட்டத்தினைப் பற்றிய ரகசியத் தகவல்களைக் கூறிய கருங்காலிகள் என்று கருதப்பட்டதன் பேரில் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களேயான மூன்று பேர்கள் ஒருவர்பின் ஒருவராக மூன்று இரவுகளில் கொலை செய்யப்பட்டார்கள். அதற்கு அடுத்த வாரம் புதன்கிழமை டொனால்ட் காண்டன் போலீஸ் தலைவரைத் தாக்கி ஒரு தலையங்கம் எழுதினார். வெள்ளிக்கிழமையன்று நடுநிசிக்குப் பிறகு டொனால்ட் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிக் கொண்டிருக்கையில் அவர் வீட்டு வாசலிலேயே சுட்டுக் கொல்லப்பட்டார். அவருக்கு அப்போது வயது முப்பத்தி ஆறுதான்!

கள்ளக் கடத்தலில் ஈடுபட்டவர்களும், லாகிரி வஸ்துக்களில் ரகசிய வியாபாரம் செய்தவர்களும் சேர்ந்து காண்டன் போலீஸ் தலைவர் துப்பறியும் இலாகா தலைவர் ஆகியோரது ஒத்துழைப்புடன் அந்தக் கொலையாளிக்குப் பணம் கொடுத்து இந்தக் காரி



# எமனை ஏமாற்றியவர்!

**“உயிரைத் திருணமாக மதித்து...” என்று சுலபமாகச் சொல்லி விடுகிறோம். ஆனால் நம்மில் எத்தனை பேர் உண்மையிலேயே உயிரைப் பணயம் வைக்கத் துணிவோம்?**

அவரது தினசரிப் பத்திரிகை வெளி வந்து கொண்டிருந்தது.

டொனால்டின் தகப்பனரும் ஆறு சகோதரர்களில் நால்வரும் டொனால்டைப் போலவே பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டவர்கள்தான். இண்டியானா சர்வகலாசாலையில் பத்திரிகைத் தொழில் படிப்பில் தேர்ச்சி பெற்றுப் பின்னர் டெய்லி நியூஸில் சேர்ந்து அதன் ஆசிரியராகவுமாகியிருந்தார் டொனால்ட்.

விபசாரம், மது, லாகிரி வஸ்துக்கள் இவற்றில் ரகசிய வியாபாரம் செய்து வந்த ஒரு குண்டர்கள் கூட்டத்தைப் பற்றி அவர் துணிந்து எழுதினார். இவரது எதிர்ப்பைப் பிரபல வியாபாரிகள், அரசியல்வாதிகள், உற்பத்தியாளர்கள் உள்ளடங்கிய பலரும் விரும்பவில்லை. இந்தப் பெரிய புள்ளிகள் டொனால்டை நாசூக்காக எச்சரித்தார்கள்.

யத்தில் ஏவி விட்டிருந்தனர் என்பது பின்னால் அம்பலமாயிற்று.

டொனால்ட் எடுத்துக் கொண்ட முயற்சி காரணமாக உயிர்த் தியாகம் புரிந்ததன் விளைவாகக் காண்டன் நகரம் சீர்ப்பட்டது. அவர் நடத்திய ‘டெய்லி நியூஸ்’ பத்திரிகைக்கு மிக உயர்ந்த சமூக சேவை புரிந்தமைக்காக ‘புலிட்ஸர் பரிசு’ 1926ம் வருஷத்தில் கிடைத்தது.

அன்றைய தினத்திலிருந்து ஒவ்வொரு வருஷமும் டொனால்ட் மெல்லட் நினைவுச் சொற்பொழிவுகள் அமெரிக்காவின் பல நகரங்களிலும் உள்ள பத்திரிகைத் தொழில் கல்லூரிகளில் நடைபெற்று வருகின்றன.

அச்சமற்ற சமூக சேவைக்கு எடுத்துக்காட்டாக டொனால்ட் மெல்லட் இன்றும் அமெரிக்கர்களின் நெஞ்சங்களில் வாழ்ந்து வருகிறார்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

